வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

**சந்தாத் தொகை (ஆண்டிற்கு)**

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. **129.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **276.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. **135.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **276.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

# மங்கை

ஜூன் '97

## தொண்டுச் சிறப்பிதழ்



- அரவிந்த அன்னையின் ஆன்மீகத் தொண்டு
- மயிலாப்பூர் சீரடி சாயிபாபா கோயில்
- தொண்டின் இலக்கணம் தெரசா அன்னை



- ஸ்ரீஜயேந்திரர் பதில்கள்
- சென்னையில் சாயி அன்னை
- மக்கள் சேவையே மகேசன் சேவை
- ஜோதிட ஆலோசனை
- வெந்தயக் கீரையில் விதவிதமான சமையல்

விலை ரூ. 9/-



# அம்புலிமாமா

## ஜூன் 1997



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

அம்மா
எல் ஐ சினா என்ன ?

பாதுகாப்பான,வசதியான
கம்பனினு அர்த்தம் குட்டியே!



எல் ஐ சி என்ருல் லைஃப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா. இது குழந்தைகளின் எதிர்காலத்திற்கென பல புதுமையான திட்டங்களை வைத்துள்ளது. ஜீவன் சுகன்யா, ஜீவன் கிஷோர், ஜீவன் பால்யா மற்றும் சில்ரன்ஸ் மணிபேக் பாலிசிபற்றி உங்கள் பெற்றோரிடம் கேளுங்கள்.

எல். ஐ. சி. உங்களை பேணுகிறது, எப்போதும்.



**லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

*காப்பீடு செய்யுங்கள், பாதுகாப்பு பெறுங்கள்.*

R K SWAMY/BBDO LIC 6175 D TAM






# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## அனைவருக்கும் கல்வி

பள்ளிகள் கோடை விடுமுறைக்குப் பின் திறந்து மாணவர்களைச் சேர்த்துக் கொண்டும் விட்டன. பல ஆயிரக் கணக்கான சிறுவர்கள் பள்ளிகளில் இடம் கிடைக்காததால் வேறு இடங்களில் வேலைக்கு அமர்ந்து விடுகிறார்கள். வேறு சிலரோ வீண் பொழுது போக்குகிறார்கள். மேடைகளிலும் கருத்தரங்கங்களிலும் உரத்த குரலில் 'அனைவருக்கும் கல்வி அளிப்போம்' என அறிஞர்களும் அரசியல்வாதிகளும் ஆட்சியாளர்களும் முழக்கமிடுகிறார்கள். ஆனால் நடைமுறையில் நாம் காண்பது என்ன?

இதுவெறும் கோஷமாக இருக்கிறதேயொழிய அரசியல் நிர்ணயச் சட்டம் கூறுகிற படி குழந்தைகளுக்கு 14 வயது வரை கட்டாயக் கல்வி அளிக்கப்படும் என்பது கடந்த ஐம்பது ஆண்டுகளில் சரியாகச் செயல்படுத்தப் படவில்லை. இதற்குப் பல காரணங்களைக் கூறி விடுவார்கள். குடும்பத்திற்குச் சிறுவர்கள் சம்பாதித்துக் கொடுக்க வேண்டிய நிலை உள்ளது என்பார்கள்.

இவ்வாறு சிறுவர்களை வேலைக்கு போக விடாமல் பள்ளிகளில் இடமளித்து அவர்களுக்கு ஒருவேளை உணவாவது கிடைக்கச் செய்து கல்வி அளித்தாலே அனைவருக்கும் கல்வி அளிப்போம் என்பதை நிறைவேற்றிக் காட்ட முடியும். எனவே இதற்கு ஆவன செய்தல் வேண்டும்.

**மதிமுகம்: 100** **ஜூன் 1997** **புன்னகை: 6**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

# ரஷ்யா - பெலாரஸ் இணைப்பு

ரஷ்யாவும் பெலாரஸும் மே 20ந் தேதி ஒரு பெடரேஷனாக இணையப் போகிறது. ஐந்தாண்டுகளுக்கு முன் சோவியத் யூனியன் 15 குடியரசுகளாகிச் சிதைந்து போயிற்று. அக் குடியரசுகளின் மக்கள் சுதந்திரம் பெற்றுவிட்டதாக ஆனந்தக் கூத்தாடினார்கள். ஆனால் அந்த மகிழ்ச்சி வெகு நாட்களுக்கு இருக்கவில்லை.

சோவியத் யூனியன் 1991ல் சிதைந்து போனபின் தனியான குடியரசுகள் பொருளாதாரச்சிக்கல்களில் அகப்பட்டன. விலைவாசிகள் ஒரேயடியாக உயர்ந்தன. சில குடியரசுகளில் ரொட்டிக்காக மக்கள் வரிசைகள் உணவு வினியோகக் கடைகளின் முன் மணிக் கணக்கில் நிற்க வேண்டி வந்தன. சோவியத் யூனியனில் ஒன்றாக இருந்த போது தாம் சுகமாக இருந்ததாயும் அதனால் மீண்டும் ரஷ்யாவுடன் இணைவதே மேல் எனவும் பலர் நினைக்கலானார்கள்.

ரஷ்யாவிற்கும் பெலராஸிற்குமிடையே அதிக கருத்து வேறுபாடு இல்லை. இரு நாடுகளுக்கும் பொது மொழி ரஷ்யன். கல்விக்கும், தொழில் நுணுக்கங்களுக்கும் முன்னேற்றம் கண்டுள்ளது பெலாரஸ் எனப் பெயர் பெற்றது. அதனால் அந் நாட்களில் ரஷ்யா பெலராஸ் பகுதியில் எலெக்ட்ரானிக்ஸ் யந்திர உற்பத்தி, பெட்ரோ கெமிகல்ஸ் உணவு சம்மந்தப்பட்ட பல திட்டங்களை நிறைவேற்றி இருந்தது. அவற்றிற்கு வேண்டிய மூலப் பொருள்களை ரஷ்யா அப் பகுதிக்கு அனுப்பியது. மேலும் பெலாரஸ் முக்கிய மையமாக இருந்ததால் இதன் வழியாக ரஷ்யா தன் பொருள்களை ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்தது.

இந்த ஏற்பாடு இந்த இணைப்பிற்காக மீண்டும் தொடரலாயிற்று. இரு குடியரசுகளும் இக்காரணங்களால் இணைவதில் ஆச்சரியம் இல்லையே. மேலும் ரஷ்ய அதிபர் தேர்தலில் போரிஸ் எல்ஸ்டன் வெற்றி பெற பெலாரஸ் பெரிதும் உதவியது. 1996 ஆரம்பத்தில் இந்த இரு குடியரசுகளும் பல துறைகளில் ஒத்துழைக்க ஒப்பந்தங்கள் செய்து கொண்டன. ஏப்ரல் 2ந் தேதி இந்த இரு நாடுகளின் பெடரேஷன் ஏற்பட வழி வகுக்கப்பட்டது. ஒப்பந்தமும் ஏற்பட்டது. ரஷ்யக் குடியரசுத் தலைவர் எல்ஸ்டீனும் பெலார்ஸ் குடியரசின் அதிபர் லெக்ஷன் கோவும்மே 20ல் இந்தப் பிரகடனத்தில் கையொப்பம் இடுவார்கள். அதன் பின் இரு நாடுகளின் நாடாளும் மன்றங்களும் இதற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும்.

இந்த ஏற்பாட்டால் ரஷ்யாவுக்குத்தான் அதிக லாபம் என பெலாரஸில் பலர் அஞ்சுகிறார்கள். பெலாரஸ் தலைநகர் மின்ஸிக்கில் இதனை எதிர்த்து ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. ஆனால் பெலரஸில் பொது மக்கள் வாக்கெடுப்பு இது பற்றி எடுக்கப்பட்டதில் பெரும்பான்மையினர் இந்த இணைப்பைச் சரி என்றனர்.

இது போல ரஷ்யாவுடன் மற்ற குடியரசுகள் சேர்ந்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை.






# கவிஞரின் இதய நோய்

ரத்தினபுரியின் ஆஸ்தானக் கவிஞர் நாராயணபட்டர். தம் புலமையை எண்ணி கர்வம் கொண்டிருப்பவர். எந்தப் புலவரும் பண்டிதரும் ஜமீன் தாரரைப் பார்க்க வந்தாலும் அவர் அனுமதித்தாலே பார்க்க முடியும். அவர் எப்போதும் பிறரது கவிதை களிலும் நூல்களிலும் குற்றம் குறை களையே கண்டு சொல்பவர்.

இவ்வளவுக்கும் நாராயணபட்டர் யாரிடமும் கை நீட்டி லஞ்சம் வாங்கு பவரல்ல. கவிஞர் யாராவது வந்தால் கேலியாகப் பேசி அவர் தமக்கு சம மாக இல்லை என்று கூறி மட்டம் தட்டுபவர். தன் சொல்லை யாராவது எதிர்த்தால் அவர் சகித்துக் கொள்ளக் கூடியவர் அல்ல. ஜமீன்தாரருக்கு வேண்டியவர்களை மகிழ்வித்தும் மற்றவர்களைத் தூக்கி எறிந்து பேசும் இயல்பும் கொண்டவர்.

ஜமீன்தாரர் மிக நல்லவர். அவரி டம் கர்வமும் தான் என்ற எண்ணமும் கிடையாது. யாருக்கும் கெடுதலை நினைக்காதவர். கோள் சொல்பவ ரைத் தன்னருகே கூட அணுக விடாத வர். அதனால்தான் தம் ஆஸ்தானக் கவிஞரின் அகங்காரம் பற்றி அவர் அறியாமல் இருந்தார்.

ஒருநாள் ஜமீன்தாரர் தம் வண்டி யில் அமர்ந்து வெளியூருக்குப் போய்க் கொண்டிருந்தார். வழியில் அவரது வண்டியின் சக்கரத்தில் மேல் பட்டா கழன்று விட்டது. அதைச் சரி செய்ய அரை மணி நேரமாவது ஆகும் எனக் கூறி வண்டிக்காரன் அவரை அருகி லிருந்த ஒரு மாந்தோப்பிற்குப் போய் சற்று இளைப்பாறும்படியும் சக்கரத் தைச் சரிப்படுத்தி விட்டு அங்கு வந்து அழைத்து வருவதாகவும் கூறினான். ஜமீன்தாரரும் தோப்பினுள் சென்றார்.

அங்கே ஒரு சிலர் ஒரு மரத்தடியே கூடி இருப்பதைக் கண்டு அவர் அங்கே சென்றார். அங்கு ஒருவன் கவிதைகள் கூறிக் கொண்டிருப்பதையும் மற்றவர்

—சிவனார் செல்வன்—

கள் ஆவலுடன் கேட்டுக்கொண்டிருப்பதையும் அவர் கண்டார்.

அந்த இளைஞன் தன் கவிதையைக் கூறி விளக்கம் தருவதையும் மற்றவர்கள் கவனமாகக் கேட்பதையும் ஜமீன்தாரர் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தார். அப்போது அந்த இளைஞன் ''இன்றைக்கு இது போதும். இனி நாளை மீண்டும் கூடலாம். நானும் என் காவல் வேலையை கவனிக்க வேண்டும்'' எனவே எல்லோரும் எழுந்து சென்றனர்.

எல்லோரும் போனபின் ஜமீன்தாரர் அந்த இளைஞனிடமே அவனைப் பற்றி விசாரித்தார். அவனும் ''நான் எழுதிய ஒரு காவியத்தை ரத்தினபுரி ஜமீன்தாரருக்கு வாசித்துக் காட்டச் சென்றேன். ஆனால் ஆஸ்தான கவிஞர் நந்தி போலக் குறுக்கே நின்று என்னை ஜமீன்தாரரிடம் போக விடாமல் தடுத்து விட்டார். நானும் வேறு வேலை செய்ய வேண்டியதால் இந்தத் தோட்டக் காவல் வேலையை ஏற்றுக் கொண்டேன்'' என்றான்.

''நீ உன் கவிதைகளை இப்படிக் கூட்டம் கூட்டிக் கூறி வருவதால் என்ன லாபம்?'' என்று ஜமீன்தாரர் கேட்கவே அவனும் ''என் கவிதைகளை மற்றவர்கள் ரசித்துக் கேட்கிறார்களே என்ற திருப்திதான் எனக்குக் கிடைக்கும் லாபம்'' எனக் கூறினான்.

ஜமீன்தாரரும் ''பேஷ். இவ்வளவு பேர் ரசிக்கும் காவியத்தை நீ ஏன் ரத்தினபுரி ஜமீன்தாரரை நேரில் கண்டு படித்துக் காட்டக் கூடாது?'' எனக் கேட்கவே அந்த இளைஞனும் ''நான் பலமுறை ஜமீன்தாரரைப் பார்க்க முயன்றேன். ஆனால் ஒவ்வொரு



தடவையிலும் நாராயண பட்டர் முட்டுக் கட்டை போட்டுத் தடுத்து விட்டார். ஜமீன்தாரரைக் கேட்க விடாமல் தான் அந்த ஆஸ்தானக் கவிஞரால் செய்ய முடியும். ஆனால் இந்த ரசிகர்களை அவரால் தடுக்க முடியாது. இவர்களோ தினமும் வந்து ஆவலுடன் என்னைக் கவிதைகள் கூறச் சொல்லி கேட்டுப் போகிறார்கள்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

ஜமீன்தாரரும் ''உன் கவிதைகளை நான் சற்று முன் கேட்டு மகிழ்ந்தேன். என் சபையோர்களும் என்னைப் போல இவற்றை ரசித்து மகிழ வேண்டும். நான் தான் ரத்தினபுரியின் ஜமீன்தாரர். நீ இன்றைக்கு ஏழாவது நாள் என்னை என் சபையில் வந்து பார். இந்தா என் மோதிரம். இதை காட்டினால் உன்னை யாரும் தடுக்காமல்



நேரே என்னிடம் கொண்டு வந்து விட்டு விடுவார்கள்'' எனக் கூறி தான் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி அவனிடம் கொடுத்தார்.

அந்த இளைஞனும் பணிவுடன் வணங்கி மோதிரத்தை வாங்கிக் கொண்டான். அப்போது ஜமீன்தார ரின் வண்டிக்காரன் வந்து சக்கரத்தைச் சரிப்படுத்தி விட்டதாகக் கூறவே ஜமீன்தாரரும் இளம் கவிஞனைக் குறித்த நாளில் தன் சபைக்கு வந்து அவனது கவிதையைப் படிக்குமாறு கூறிவிட்டுச் சென்றார்.

இளம் கவிஞனான அரவிந்தனும் குறித்த நாளில் ரத்தினபுரிக்குப் போய் ஜமீன்தாரர் கொடுத்த மோதிரத்தை அரண்மனைக் காவலாளிகளிடம் காட்ட ஒரு காவலாளி அவனை அழைத்துப் போய் சபையில் ஜமீன்தாரர் முன் கொண்டு போய் விட்டான். ஜமீன்தாரரும் அவனை வரவேற்று அவனது காவியத்தை சபையோர் கேட்கப் படித்துக் கூறும்படி சொல்லவே அரவிந்தனும் அவ்வாறே செய்தான். சபையோரும் ஜமீன்தாரரும் அதனை வெகுவாக ரசித்துப் பாராட்டினார்கள்.

ஜமீன்தாரர் தம் திவானிடம் அரவிந்தனுக்கு அந்தக் காவியத்திற்காக ஆயிரம் பொற்காசுகள் பரிசு கொடுக்குமாறு கட்டளை இட்டார். அப்போது நாராயணபட்டர் எழுந்து ''அவனுக்கு பரிசு கொடுக்க கூடாது. ஏனெனில் இதைப் பரிசிற்கு ஏற்றது என நான் கூறவில்லை. காவியத்தை பரிசீலித்து அதற்குப் பரிசு பெறத் தகுதி இருக்கிறதா அல்லது இல்லையா எனக் கூற எனக்குத்தான் உரிமை உள்ளது'' என்று கர்வத்தோடு கூறினார்.

அதைக் கேட்டு அந்த சபையில் உள்ளவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஜமீன்தாரர் முடிவு செய்ததை எதிர்த்து கூறுவது ஆஸ்தான கவிஞருக்கு அழகல்ல என்று எல்லோருமே நினைத்தார்கள். ஜமீன்தாரரோ நாராயண பட்டர் கூறியதைக் கேட்டு பலமாகச் சிரித்தார். இது பட்டருக்கு மேலும் கோபத்தை மூட்டியது. அவர் உரக்க ''இந்தக்கவிதைப் பரிசிற்கு ஏற்றதல்ல என்பது என் தீர்ப்பு. பரிசு கொடுக்கப் பட மாட்டாது'' என்று கத்தினார்.

ஜமீன்தாரரோ ''அதை நீர் உரிமையாகக் கூற முடியாது. நீங்கள் அது பற்றிப் பரிந்துரை செய்யலாம். அதை ஏற்பதோ அல்லது நிராகரிப்பதோ என் இஷ்டம். அரவிந்தனின் காவியத்தை சபையோரும் ரசித்துக் கேட்டார்கள்.

நானும் கேட்டேன். அது பரிசு பெறத் தக்கதே என்பது என் தீர்ப்பு. உங்களால் ரசிக்க முடியவில்லை என்றால் பேசாமல் உட்கார்ந்திருங்கள். ஆஸ்தான கவிஞன் கர்வம் கொண்டு மற்ற கவிஞர்களின் முன்னேற்றத்தைத் தடுக்கக் கூடாது'' என்றார்.

நாராயணபட்டரோ ''நான் படித்தவன். மாபெரும் மேதை. எனக்குத் தான் காவியத்தின் தகுதி பற்றி முடிவு செய்ய உரிமை உள்ளது'' எனவே ஜமீன்தாரரும் ''உங்களைப் போல காவியம் நன்றாக உள்ளது எனக் கூற எல்லோருக்கும் உரிமை இருக்கிறது. இந்த இளம் கவிஞனின் காவியத்தை இந்த சபையே ரசித்தது அதன் தகுதியை எடுத்துக் காட்டுகிறது. மேலும் பரிசையும் பரிசுத் தொகை இவ்வளவு என்பதனையும் முடிவு செய்பவன் நான். என் முடிவை யாரும் தடுக்க முடியாது'' எனக் கூறி திவானைப் பார்க்கவே அவரும் ஆயிரம் பொற்காசுகளை பொக்கிஷத்திலிருந்து எடுத்து வந்து அரவிந்தனிடம் கொடுத் தார்.

நாராயணபட்டர் இது தமக்கு அவமானம் எனக் கருதி கோபம் கொண்டு சபையை விட்டு வெளியேறினார். வீட்டிற்குப் போய் அவர் தம் மனைவியிடம் ''இன்று ஜமீன்தாரர் சபையில் எல்லோருக்கும் முன் அவமானப் படுத்தி விட்டார். அவர் தன்னிடம் பணம் இருக்கிறது என்று ஒரேயடியாகக் கர்வம் கொண்டிருக்கிறார். இதுவரை என் பேச்சிற்கு மறு பேச்சு பேசாத அவர் இன்று ஒரு கவிஞனுக்குப் பரிசளிக்கக் கூடாது என்று நான் கூறியும் அதை ஏற்காமல் அந்தக் கவிஞனுக்கு ஆயிரம் பொற்காசுகளைப்



பரிசாக அளித்து விட்டார். என் பேச்சு எடுபடாததால் நான் சபையிலிருந்து எழுந்து வந்து விட்டேன்'' என்று சபையில் நடந்ததைக் கூறிப் பொருமினார். அப்போது அரவிந்தன் அவரைக் காண வந்தான். அவரோ எரிந்து விழுந்து ''உனக்குத்தான் ஜமீன்தாரரின் பரிசு கிடைத்து விட்டதே. என்னை ஏன் காண வந்தாய்? என்னைக் கேலி செய்யவா? போ'' என விரட்டலானார்.

அரவிந்தனோ ''இதில் என் தவறு எதுவும் இல்லை என்று கூறவே வந்தேன். ஒரு கவிஞனை நீங்கள் இப்படி அகம்பாவம் கொண்டு நடத்தக் கூடாது. இதற்குத் தக்க பலனை அனுபவிப்பீர்'' என்று கூறி விட்டுச் சென்றான். நாராயண பட்டரின் கோபம் மேலும் அதிகரித்தது. அவர் அரவிந்தன் அங்கு இல்லாது போனாலும்



அவனைப் கண்டபடி திட்டிக் கொண்டே இருந்தார். அப்போது அவருக்கு நெஞ்சுவலி கண்டது. அவர் பேச்சு மூச்சற்றுச்சாய்ந்து விடவே அவரது மனைவி உடனே வைத்தியரை அழைத்து வர ஆளை அனுப்பினான்.

வைத்தியர் வந்து நாராயண பட்டரைப் பார்த்து விட்டு ''இது பலமான இதய நோய். இதனை சித்தபுர வைத்தியர் சித்தலிங்கத்தால்தான் குணப்படுத்த முடியும். அவர் ராஜாக்களுக்கும் ஜமீன்தாரர்களுக்கும் மட்டுமே வைத்தியம் செய்பவர். நம் ஜமீன்தாரர் சொன்னால் அவர் இவரைப் பார்த்து மருந்து கொடுப்பார்'' என்றார்.

ஜமீன்தாரருக்கும் நாராயண பட்டரின் இதய நோய் பற்றித் தெரிந்தது அவர் உடனே நாராயண பட்டரை சித்தபுரத்திற்கு அனுப்பி சித்தலிங்கரிடம் அவருக்கு வைத்தியம் செய்யுமாறு வேண்டினார். அவரும் நாராயண பட்டரைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு ''இது மன நோய். இதற்கான உண்மைக் காரணம் தெரிந்தாலே இதை குணப்படுத்த முடியும்'' என்றார்.

அப்போது பட்டர் நடந்ததைக் கூறி ''என் நோய்க்குக் காரணம் ஜமீன்தாரரும் அரவிந்தனும் கொண்டிருக்கும் அகங்காரமே'' என்றார். சித்தலிங்கமும் ''ஜமீன்தாரர் உங்களுக்கு வைத்தியம் செய்யச் செலவு செய்யும் தயாளர். அரவிந்தன் நடந்ததற்கு வருத்தம் தெரிவிக்க வந்த நற்குணவான். அவர்களைத் துச்சமாக மதித் தது உம் அகங்காரத்தால்தான்'' என்றார். நாராயண பட்டரோ ''நான் மெத்தப் படித்தவன். அகங்காரம் என்னவென்று எனக்குத் தெரியும். நீர் சொல்லத் தேவையில்லை'' என்று கத்தினார்.

சித்தலிங்கமும் ''ஆம். நான் வைத்தியன். பண்டிதரல்ல. உங்கள் நோயின் உண்மைக் காரணம் எனக்குத் தெரிந்தாலே வைத்தியம் செய்வேன். ஜமீன்தாரர் மீதும் அரவிந்தன் மீதும் எவ்விதத் தவறும் இல்லை. தவறு உம் மீது தான் இருக்கிறது. எனவே உம்மைப் பற்றிய முழு விவரங்களும் எனக்குத் தெரிந்தால்தான் நான் உங்களுக்கு வைத்தியம் செய்ய முடியும். இது மன நோய். எனவே உங்கள் சுபாவம் எப்படிப்பட்டது, நீர் பிறரிடம் எப்படிப் பழகுகிறீர் என்பதெல்லாம் தெரிந்தாக வேண்டும். உம்மிடமிருந்து நான் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியாது. ஏனெனில் நீர் கர்வத்தால் எதையும் சொல்ல மாட்டீர். அதனால் என் சீடனை ரத்தினபுரிக்கு அனுப்பி உம்

மைப் பற்றி அறிந்து கொள்கிறேன்'' எனக்கூறி தம் சீடன் ஒருவனை ரத்தின புரிக்கு அனுப்பினார்.

சீடனும் ரத்தினபுரிக்குப் போய் நாராயணபட்டரைப் பற்றிப் பலரிடம் கேட்டான். ஒருவரோ பட்டர் தன் மகனோடு சண்டை போட்டு அவனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டார் என்றார். இன்னொருவர் பட்டர் தம் அடுத்த வீட்டுக்காரருடன் காரணமில் லாமல் சண்டை போடுபவர் என்றார். இன்னொருவர் பட்டர் தம் வயலில் வேலை செய்யும் ஆட்களோடு தக ராறு செய்பவர் என்றார். இது போல அவர் வீட்டு சலவைக்காரன், பால் காரன் எல்லோரும் தம் வேலைகளில் ஏதாவது குறை கூறித் தம்மோடு சண்டை போடுவார் எனக் என்றனர்.

சீடன் திரும்பி வந்து சித்தலிங்கத்தி டம் தான் ரத்தினபுரியில் பட்டர் பற் றிச் பலர் கூறக் கேட்டதைச் சொன் னான். அதை எல்லாம் நாராயண பட்டரும் கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது சித்தலிங்கம் ''உம் ஊரார் உம்மைப் பற்றி நல்ல அபிப்பிராயம் தெரிவிக்கவில்லை. நீர் அகங்காரம் கொண்டு எல்லோரிடமும் எப்படி எல்லாம் நடந்து கொண்டு வருகிறீர் என்பது தெரிந்து விட்டது. எனவே உங்கள் மனநோய்க்குக் காரணம் உங் கள் அகங்காரம்தான் என்பது தெரிந்து விட்டது'' என்றார்.

நாராயண பட்டர் தலை குனிந்து கொண்டார். அப்போது வைத்தியர் ''நீர் முதலில் உம் அகங்காரத்தை விட் டொழிக்க வேண்டும். உம்மைவிட உயர்ந்தவர்கள் இருக்கிறார்கள் என் பதை உணர வேண்டும். யாரையும் மதிக்கும் நற்குணத்தை நீர் கொண் டிருக்க வேண்டும். பிறரது முன்னேற் றத்திற்குத் தடையாக இருக்கக் கூடாது'' என்றார்.

நாராயணபட்டரும் ''ஆமாம். நீங் கள் சொல்வது சரி என்று உணர்கிறேன் எனக்கு உள்ள உரிமை பிறருக்கு உள் ளது என்பதைத் தெரிந்து கொண் டேன். இனிமேல் யாருடைய முன் னேற்றத்திற்கும் தடையாக இருக்க மாட்டேன். பிறரை மதித்து நடப் பேன்'' என்று மனம் மாறிக் கூறினார்.

வைத்தியரும் அவர் மனமாறியது கண்டு அவருக்குச் சிகிச்சை அளித்து அவரது ஊருக்கு அனுப்பினார். நாரா யண பட்டர் மாறிவிட்டார்.



# பார்வை இல்லாதவனா!

ஒரு கோவிலின் முன் ஒரு பிச்சைக்காரன் தன் முன் துண்டை விரித்துப் போட்டுக் கொண்டு "ஐயா! கண்ணில்லாத கபோதி! ஏதாவது தர்மம் செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டிருந்தான். அவ்வழியே சென்றவர்களும் அவன் மீது இரக்கப்பட்டு தம் கைக்கு கிடைத்த காசுகளைப் போட்டுவிட்டுச் சென்றனர்.

கோவிலுக்கு தரிசனம் செய்ய வந்த சுந்தரம் என்ற இளைஞன் ஏனோ சந்தேகப் பட்டு அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்துக் கொண்டு சற்று தூரத்தில் நின்றான். பிச்சைக்காரனும் சுற்று முற்றும் பார்த்துவிட்டு தன்னை யாரும் கவனிக்கவில்லை என்று உறுதி செய்து கொண்டு துண்டில் விழுந்த நாணயங்கள் நல்லவைதானா என்று பார்த்துவிட்டுத் தன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான். இதை சுந்தரம் கவனித்துவிட்டு அவனருகே போய் நின்றான்.

பிச்சைக்காரனும் அவனைப் பார்த்து "ஐயா! பார்வை இழந்த எனக்கு ஏதாவது தர்மம் போடுங்கள்" என்று கேட்டான். சுந்தரமும் "உனக்கா பார்வை இல்லை? நான் நம்ப மாட்டேன்" என்றான்.

அப்போது பிச்சைக்காரன் "அதோ தொலைவில் பச்சை நிற வீட்டைத் தாண்டியுள்ள கொய்யாத்தோப்பும், தென்னந்தோப்பும் தங்களுக்குத் தெரிகிறதா?" என்று கேட்டான். சுந்தரமும் "ஆகா! மிக நன்றாகத் தெரிகிறதே" என்றான்.

அப்போது அவன் "எனக்குத் தெரியவில்லை அதுதான் உங்களுக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்" என்றான்!





# மாமன்னர் அசோகர்

5

மகத சக்கரவர்த்தி கிழவராகி நோயுற்றிருந்த சமயம் தட்சசீலத்தில் கலகங்கள் தலை தூக்கின. அவற்றை அடக்க அவரது மூத்த மகன் சுசிம்மன் அங்கு செல்ல விரும்பவில்லை. அவரது இன்னொரு மகன் அசோகன் படையோடு சென்று ஒரே நாளில் கலகங்களை அடக்கி தட்ச சீலத்தில் கலகக்காரர்களைப் பிடித்து சற்றும் இரக்கம் காட்டாமல் அவர்களுக்கு மரண தண்டனை விதித்தான். பிறகு—

ஒரு நாள் மாலை பிந்துசாரனின் மூத்த மகனான இளவரசன் சுசிம்மன் தன் தம்பிகளுடன் எங்காவது போய் கொஞ்ச நாட்கள் சுகமாக இருக்க எண்ணிக் கிளம்பி விட்டான் பாடலிபுத்திரத்தருகே ஓடும் நதிக் கரையிலுள்ள ஒரு அழகிய பூங்காவைத் தேர்ந்தெடுத்து அங்கு சென்றார்கள். அங்கு கூடாரங்களை அமைத்துக் கொண்டு மது, மங்கை என்று கேளிக்கைகளில் ஈடுபட்டார்கள்.

சுசிம்மன் வீரர்களிடம் யாரையும் அப்பகுதிக்குள் வரவிடக் கூடாதென்று கட்டளையிட்டான். பிறகு அவன்தன்தம்பிகளுடன் மது அருந்தி பட்டு விரிப்பில் அமர்ந்து நடன மாதுகளின் நடனங்களை ரசிக்கலானான் அப்போது திடீரெனச் சற்று தூரத்தில் முரசொலி கேட்கவே அவன் திடுக்கிட்டான் அப்போது அவனது வீரன் ஓடிவந்து ''பிரபுவே! நம் படைத்தலைவர்களில் ஒருவர்தம் வீரர்களுடன் இப்

பகுதிக்குள் வர வேண்டும் என்று கூறுகிறார். நான் தங்களது கட்டளைப் படி தடுத்தேன். ஆனால் அவரோ அரசமுத்திரையைக் காட்டிதான் இங்கு செல்ல வேண்டுமெனக் கூறிக் கொண்டிருக்கிறார்'' என்றான்.

அது கேட்டு சுசிம்மன் ''அவனுக்கு இப்போது இங்கு என்ன வேலை?'' என்று கேட்கவே அந்த வீரனும் ''நானும் இதையே கேட்டேன். ஆனால் அவர் அதைத் தங்களிடம் மட்டுமே தான் கூறுவாராம்'' என்றான். சுசிம்மனும் அலட்சியமாக ''சரி, அவனை அழைத்து வா'' என்று கூறினான். அடுத்த சில நொடிகளில் படைத் தலைவனும் வந்து சுசிம்மன் முன் நின்றான்.

படைத் தலைவன் சுசிம்மனை வணங்கி நிற்கவே அரசகுமாரன் தன் வீரனை அங்கிருந்து போகும்படி சைகை செய்தான். அந்த வீரன் சென்றதும் அப்படைத் தலைவனிடம் ''நீ என் கேளிக்கைகளுக்கு இடைஞ்சலா செய்கிறாய்? எப்படி உனக்கு இந்தத் துணிச்சல் வந்தது?'' என்று கோபத்தோடு கேட்டான்.

படைத்தலைவனும் ''எனக்கு அவ்வளவு துணிச்சல் ஏது பிரபுவே! ஒரு மாபெரும் வரவேற்பு இங்கு நடக்க உள்ளது. அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி சேனாதிபதியார் கட்டளை இட்டிருக்கிறார். என்னோடு வந்த வீரர்கள் அதற்காக காத்து நிற்கிறார்கள். இப்பகுதிக்குள் செல்ல இப்போது தங்களது அனுமதி தேவை'' என்றான்.

அது கேட்டு சுசிம்மன் பலமாகச் சிரித்தவாறே ''மாபெரும் வர



வேற்பா! இந்த மரியாதை யாருக்கு?'' என்று கேட்டான் ''இளவரசர் அசோகருக்குத்தான்'' என்றான் அவன். சுசிம்மனும் ''அசோகனுக்கா? எதற்காக வரவேற்பு?'' என்று புருவத்தை நெளித்துக் கொண்டு கேட்டான். படைத் தலைவனும் ''இளவரசர் தட்சசீலக் கலகங்களை ஒரு நொடியில் அடக்கி விட்டு வெற்றியுடன் திரும்பி வந்து கொண்டிருக்கிறார். அவரை வரவேற்கத்தான் இந்த ஏற்பாடு'' என்றான்.

அதைக் கேட்ட சுசிம்மனின் முகம் கோபத்தால் சிவந்தது. அவனது தம்பிகளோ கற்சிலைகளாக நின்றனர். யாரும் எதுவும் பேசவில்லை. சில நிமிடங்களுக்குப் பின் சுசிம்மன் ''ஓ! இதை எனக்கு ஏன் முன்னதாக யாரும் தெரிவிக்கவில்லை?'' என்று கேட்



டான். படைத்தலைவனும் ''இச் செய்தியைத் தங்களுக்குத் தெரிவிக்க மன்னர் ஆட்களை அனுப்பினார் ஆனால் அவர்களுக்குத் தங்களது இருப்பிடம் தெரியவில்லை. இத னால் தான் இச் செய்தி தங்களுக்குக் கிடைக்கவில்லை'' என்றான்.

சுசிம்மனும் முகத்தைச் சுளித்த வாறே ''சரி. போதும் நிறுத்து உன் பேச்சை'' என்று கூறிவிட்டு பலத்த யோசனையில் ஆழ்ந்தான். அவன் சற்று நேரம் யோசனையில் இருந்த தால் படைத் தலைவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. திடீ ரென சுசிம்மன் தன் கைவிரலிலிருந்த ஒரு வைர மோதிரத்தைக் கழற்றி அப் படைத் தலைவனின் விரலில் அணி வித்தான். அதன் பின் அவன் சிரித்த வாறே அவனது முதுகில் தட்டிக் கொடுத்து ''நீ ஒரு நற்செய்தியை கூறி னாய். அதற்கே உனக்கு இந்தப் பரிசு. நாளை நீ இதைவிடப் பெரிய வெகு மதியை அடையலாம்'' என்றான். ''மிக்க நன்றி, பிரபுவே'' என்று அப் படைத் தலைவன் கைகூப்பி வணங் கினான். சுசிம்மனும் ''நீ பெரிய வெகு மதியைப் பெற வேண்டுமானால் ஒரு வேலையைச் செய்தாக வேண் டும்'' என்றான். படைத் தலைவனும் ''அது என்னவோ?'' என்று கேட்கவே சுசிம்மனும் ''அதைப் பிறகு கூறு கிறேன். இப்போது நான் யாரென்று சொல்'' என்று கேட்டான்.

படைத் தலைவனும் ''தாங்கள் மூத்த அரசகுமாரர். இளவரசராக பட் டம் பெறப் போகிறவர்'' என்றான். அப்போது சுசிம்மன் ''நான் இளவர சனாகி விட்டால் பிறகு என்னை எப் படி மதிப்பார்கள்?'' என்று கேட்கவே படைத் தலைவனும் ''தங்களை இந் நாட்டின் வருங்கால மன்னர் என்றே கருதுவார்கள்'' என்றான். சுசிம்ம னும் ''பேஷ். சரியாகச் சொன்னாய். வருங்கால மன்னருக்கு நீ இப்போது உதவி செய்தால் உன் எதிர்காலம் சிறந்து விளங்குமல்லவா?'' என்று கேட்டான்.

படைத் தலைவனும் ''ஆமாம். நான் என்ன செய்ய வேண்டுமென்று கட்டளை இடுங்கள்.'' எனத் தன் விரலிலிருந்த வைர மோதிரத்தைப் பார்த்தவாறே கேட்டான். சுசிம்ம னும் ''அசோகனுக்கு வரவேற்பு உன் மேற்பார்வையில் தானே நடக்கப் போகிறது? அதை இதுவரை நடக்காத வரவேற்பு போலச் செய். இதற்குப் பிறகு அவன் எந்த வரவேற்பும் பெறா

மல் செய்ய வேண்டும். ஒரு வேலைக் காரியின் மகனுக்கு இதுதான் கடைசி வரவேற்பு'' என்றான்.

இதைக் கேட்ட படைத்தலைவன் திடுக்கிட்டு நின்றான். ஆனால் சுசிம் மன் மிகவும் பரிவுடன் அவனது கை களைப் பிடித்துக் கொண்டு ''பயப் பட வேண்டாம். படைத் தலைவன் பதவியிலிருந்து நீ சேனாதிபதியாக உயர் பதவி அடைய வேண்டுமென் றால் நான் சொல்கிறபடி நடக்க வேண் டும். என்ன செய்ய வேண்டுமென்று விவரமாகச் சொல்கிறேன். வா என் பின்னால்'' என்று கூறி அவனைத் தனி யாக அழைத்துச் சென்றான்.

சுசிம்மன் அந்தப் படைத் தலைவ னிடம் ஒரு திட்டத்தைக் கூறி ''நீ இதைச் செயல்படுத்து. இது மட்டும் வெற்றிகரமாக நிறைவேற்றி விட் டால் நான் இந்நாட்டின் மன்னனா னதும் உன்னை சேனாதிபதியாக்கி விடுவேன்'' எனக் கூறினான்.

படைத் தலைவனோ ''இது ஆபத் தான செயலாயிற்றே. கையும் மெய்யு மாகப் பிடிபட்டு விட்டால் என்ன ஆவது?'' என்று தயங்கியவாறே கேட் டார். சுசிம்மனும் ''பயப்படாதே. நான் எதற்கு இருக்கிறேன்? உனக்கு ஒரு ஆபத்தும் நேராதபடி நான் பார்த் துக் கொள்கிறேன். நீ துணிந்து செயல் படு'' என்றான்.

பணத்தாசையும் பதவி மோகமும் யார் மனதைத்தான் கலைக்காது? படைத் தலைவன் சுசிம்மன் விரித்த வலைக்குள் அகப்பட்டு விட்டான். அவன் கூறியபடியே செய்வதாகக்கூறி அப்படைத் தலைவனும் சென்றான்.

மறு நாள் மாலை அசோகனை வர வேற்க மகதத்தின் முதலமைச்சரும் மற்ற அமைச்சர்களும், சேனாதிபதி யும் படைத் தளபதிகளும், அதிகாரி களும், நகரப் பிரமுகர்களும் அரச குடும்பத்தினரும் நதியின் கரையி லுள்ள வனப் பகுதிக்குச் சென்றனர்.





சூரியன் மறையும் வேளையாகியும் இன்னமும் அசோகன் வந்து சேர வில்லை. முதலமைச்சர் சேனாதிபதி யிடம் ''நம் இளவரசர் வர ஏன் தாமத மாகிறது?'' என்று கேட்டார்.

சேனாதிபதியும் ''இந்த நேரத்திற்கு அவர் இங்கு வந்திருக்க வேண்டும். வழியில் ஏதாவது இடைஞ்சல் ஏற் பட்டிருக்க வேண்டும்'' என்றான். இச் சமயம் ஒரு குதிரை மீது வந்த வீரன் அங்கு இறங்கி எல்லோரையும் வணங்கி விட்டு முதலமைச்சரிடம் ''இளவரசருக்கு வழியிலுள்ள விக்த புர மக்கள் ஒன்று கூடி வரவேற்பு அளித்தார்கள். அந்தக் கூட்டத்தி லிருந்து வெளியே வர ஒரு மணிநேரத் திற்கு மேலாகி விட்டது. இளவரசர் அங்கிருந்து கிளம்பி விட்டார். இன் னும் சற்று நேரத்தில் இங்கு வந்து சேர்வார்'' என்றான்.

அப்போது சுசிம்மனும் தன் தம்பி களுடன் அந்த வரவேற்பு விழாவில் கலந்து கொள்ள வந்திருந்தான். அந்த வீரன் சொன்னதைக் கேட்டு அவன் தன் தம்பிகளைப் பார்த்து அர்த்தத் துடன் புன்னகை புரிந்தான். ஏனெனில் சுசிம்மன் தான் நடுவழியில் மக்களின் கூட்டத்தைக் கூட வைத்து இருட்டும் போது அசோகன் காட்டுப் பகுதியை அடையத் திட்டமிட்டவன்.

அங்கு பாதையை ஒட்டி ஒரு பெரிய கல் சுவர் இருந்தது. நதியில் வரும் வெள்ளம் அப்பகுதியில் புகுந்து விடா திருக்க அந்தத் தடுப்புச்சுவர் கருங்கற்க ளால் கட்டப்பட்டிருந்தது. அதில் பல கற்கள் பெயர்ந்து கிடந்தன. சூரியன் மறைந்து இருள் சூழ ஆரம்பித்தது. அங்கு வழி தெரிய ஆங்காங்கு தீவட் டிகள் ஏற்றி வைக்கப்பட்டிருந் தன.

அச்சமயத்தில் கொஞ்ச தூரத்தில் ஒரு குதிரை வரும் குளம்பொலி கேட் டது. ''மௌரிய மன்னர் பிந்துசாரர் வாழ்க'' என்ற குரல்களின் முழக்கம் கேட்டது. எல்லோரும் உற்சாகம் அடைந்து கொண்டிருக்கும் படை வீரர்களை ஆவலுடன் பார்க்கலானார் கள். அவர்கள் தென்பட்டதுமே வர வேற்க நின்றவர்கள்'' இளவரசர் அசோகர் வாழ்க! வாழ்க!!'' எனக் கோஷங்கள் எழுப்பினார்கள்.

சுசிம்மனுக்கும் அவனது ஆட் களுக்கும் ஆத்திரம் ஆத்திரமாக வந் தது. முதலமைச்சர் பெரிய மலர் மாலையை வைத்துக்கொண்டு அசோ கனின் கழுத்தில் போடத் தயாராக நின்று கொண்டிருந்தார்.

அசோகனின் படைகள் ஆற்றங்

கரையோரமாக வந்து கொண்டிருந் தன. இருட்டில் அவை வந்து கொண்டி ருந்த போது பக்க வாட்டில் ஏதோ சல சலப்பு ஏற்படுவது கேட்டது. பிறகு ஏதோ தடுப்புச் சுவரிலிருந்து சரிந்து விழவே படை வீரர்கள் அலறுவது தெளிவாகக் கேட்டது.

அப்போது சுசிம்மன் ''அதென்ன சத்தம்? படை வீரர்கள் ஏன் அலறு கிறார்கள்? என் சகோதரன் அசோக னுக்கு எந்த விதமான ஆபத்தும் ஏற் பட்டு விடவில்லையே?'' என்று கண்ணீர் வடிக்கலானான். ஆனால் அவனது கேள்விகளுக்கு யாரும் பதில் கூறவில்லை. சில வீரர்கள் என்ன நடந்தது என்பதைக் கண்டறிய தீவட்டி களுடன் குரல்கள் கேட்ட திக்கில் ஓடினார்கள்.

பலகற்கள் உருண்டு அப்பக்கமாக வந்து கொண்டிருந்த அசோகனின் படை வீரர்களின் மீது வந்து விழுந்து கொண்டிருப்பதை அவர்கள் பார்த் தார்கள். அதனால்தான் கூச்சலும் குழப்பமும் ஏற்படக்காரணம் என்பது தெரிந்தது. சேனாதிபதியும், சில படைத் தலைவர்களும் அப்பகுதிக்கு வந்து ''இளவரசரே! தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்? இளவரசே! இள வரசே!!'' என்று கூவினார்கள்.

அவர்களுக்கு எந்த பதிலும் கிடைக்கவில்லை. ஆனால் பல கூக் குரல்கள் மட்டும் கேட்டன. இது என்ன என்று எல்லோரும் திகைத்துச் சுற்றிலும் பார்த்தார்கள். அவர்களுக்கு அப்போது எதுவும் தெரியவில்லை. ஆனால் ஏதோ ஒரு விபரீதம் நடந்தி ருக்கிறது என்று மட்டும் அவர்களுக் குப் புரிந்தது. ஆனால் அது என்ன என்றுதான் தெரியவில்லை.

சற்று நேரத்திற்குப் பின் அசோக னின் கம்பீரக் குரல் அவர்களுக்குத் தெளிவாகக் கேட்டது. ''எனக்கு எவ் வித ஆபத்தும் இல்லை. நான் நன்றா கவே இருக்கிறேன். முதலில் நான் கூறுவதைக் கேளுங்கள். கற்களால் அடிபட்டுக்கிடக்கும் நம் வீரர்களுக்கு முதலில் சிகிச்சை அளியுங்கள். கற் களை விட்டெறிந்த குண்டர்களைப் பிடியுங்கள். அவர்களைத் தப்பி ஓட விடாதீர்கள். அவர்கள் எங்களைத் தாக்க முயன்றவர்கள். அவர்கள் யாரென்று அடையாளம் கண்டு கொள்ள வேண்டும்.''

**(தொடரும்)**



# கடன் வாங்கிய விதம்!

சிவபுரத்தில் பரமானந்தன் மிகவும் கெட்டிக்காரன். அவனது மகளின் திருமணத்திற்குக் கொஞ்சம் பணம் தேவைப்பட்டது. அவன் அதற்காக வட்டிக்கடை வைரமுத்துவை அணுகினான் அவனோ பணம் கொடுப்பதற்கு இல்லை எனக் கூறி விட்டான்.

அப்போது வைரமுத்துவின் மகன் ஆனந்தபுர ஜமீன் திவானுக்கு உதவியாளரின் பதவிக்கான மனுச் செய்து பல மனுதாரர்களில் அவனும் இன்னொரு மனுதாரனுடன் தேர்ந்தெடுக்கப்பட்டிருந் தான். அவ்விருவரில் அப்பதவியை யாருக்குக் கொடுப்பதுஎன்று தீர்மானிக்கப்படாமல் இருந்தது.

அதை அறிந்த பரமானந்தன். வைரமுத்துவிடம் போய் ''எனக்கு ஆனந்தபுர ஜமீனின் திவானைத் தெரியும். நாங்கள் இருவரும் பள்ளித் தோழர்கள். நான் சொன்னால் திவான் உன் மகனுக்கு அந்த வேலையைக் கொடுத்துவிடுவார். இதை நான் செய்யவேண்டுமானால் நீ எனக்கு கடன் கொடுத்து உதவு. அதை நான் வட்டியுடன் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்'' என்றான்.

வைரமுத்துவும் அவன் கேட்ட தொகையைக் கடனாகக் கொடுத்தான் இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் வைரமுத்துவின் மகனுக்கு ஜமீனில் திவானின் உதவியாளர் வேலை கிடைத்துவிட்டது.

இதைக் கண்ட பரமானந்தத்தின் மனைவி ''திவானை நீங்கள் நன்கு அறிவீர்களா? என்னிடம் இதை ஒரு நாளும் சொன்னதே இல்லையே'' என்று கேட்டாள். பரமானந்தனும் சிரித்துக் கொண்டே ''எனக்கு ஒன்றும் அவரைத் தெரியாது. வைரமுத்துவிடமிருந்து கடன் பெற அப்படிக் கூறினேன். கடன் கிடைத்துவிட்டது. வைரமுத்துவின் மகனின் அதிர்ஷ்டம் அவனுக்கு வேலை கிடைத்தது. இது தான் விஷயம்'' என்றான்.





## அபர்ணாவின் திருமணம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அதைச்சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்தது ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் மயானத்தில் நீ இப்படி சிரமப்படுவது ஏதாவது சாபத்தின் காரணத்தாலா என்ற சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது. மானிடர்கள் சிலசமயங்களில் தாம் அறியாமல் செய்யும் செயல்களுக்குக் கூட தேவதைகள், முனிவர்கள் போன்றோரின் சாபங்களுக்கு ஆளாகி விடு கிறார்கள். நீயும் அவ்வாறு ஏதாவது சாபத்தை அடைந்து விட்டாயா? இது பற்றி உனக்கு அரசகுமாரி அபர்ணாவின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை




அனங்கபுர அரச தம்பதிகளுக்கு மணமாகி பதினாறு வருடங்களாகி யும் ஒரு குழந்தை கூடப் பிறக்க வில்லை. விரதங்களிலிருந்து பல புனிதத் தலங்களுக்கு சென்றும் பலன் ஏற்படவில்லை.

இப்படி இருக்கையில் ஒரு சமயம் மழைக் காலத்தில் ஒருநாள் இடியும் மின்னலுமாக மழை பெய்து எங்கும் வெள்ளக்காடாகியது. திடீரென இடி இடித்து ஒரு மலையே வெடிப்பது போன்ற பெருத்த சத்தம் ஏற்பட்டது. அதைக் கேட்டு திடுக்கிட்டு அரசி கண் விழித்து எழுந்து தன் படுக்கையில் உட்கார்ந்தாள். சற்று நேரத்தில் மழை பெய்வது ஓய்ந்து எங்கும் அமைதி நிலவியது. அரசி மீண்டும் படுத்துத் தூங்கினாள். அப்போது அவள் ஒரு கனவு கண்டாள்.

அக் கனவில் துர்க்கா தேவி அவ ளுக்குத் தோன்றி "பல ஆண்டுகளாகக் கற்களாலும், மரங்களாலும் மூடி மறைக்கப்பட்டிருந்த என் ஆலயம் இந்த பெரும் மழையால் வெளிப் பட்டுள்ளது. பாழடைந்துள்ள அதைப் புதுப்பித்து வழிபாடுகளைச் செய்து வா. உனக்கு நன்மையே ஏற்படும்" என்றாள்.

காலையில் தான் கண்ட கனவை அரசி மன்னனிடம் கூறவே அவனும் "அந்த மலை மீது செல்ல சரியான பாதை கூட இல்லையே. அங்கே கோவில் இருந்தால் யார் போவார் கள்? ஏதோ கனவு கண்டதைப் பற் றிக் கவலைப்படாதே" என்றான். அரசியோ "அங்கு போய்த்தான் பார்க் கலாமே. ஒருவேளை அங்கு ஒரு பாழ் அடைந்த கோவில் இருந்தால் அதை துர்க்கா தேவி கூறியது போலப் புதுப் பித்தால் ஒருவேளை நமக்குத் குழந்தை பிறந்தாலும் பிறக்கலாம்" எனப் பிடிவாதமாகக் கூறவே மன்ன னும் அரசியும் ஒரு சில வீரர்களுடன் அந்த மலைமீது ஏறிச் சென்றனர்.

அங்கு அவர்கள் பாழடைந்த ஆல யத்தைக் கண்டனர். அரசியின் வேண்டுதலின் பேரில் அப்போதே மன்னன் அந்த ஆலயத்தைப் புதுப் பிக்கும் வேலையில் தன் ஆட்களை அமர்த்தினான். ஆறு மாதங்களில் அக் கோவில் புதுப்பிக்கப்பட்டு அதற் குப் போக வழியும் நன்கு அமைக்கப் பட்டது.

துர்க்கா தேவிக்கு வழிபாடுகள் முறைப்படி நடக்கலாயின. ஓரிரு மாதங்களுக்குள் அரசி கர்ப்பமுற் றாள். அரசிக்கும் மன்னனுக்கும்

மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர்கள் துர்க்கையின் விக்கிரத்திற்கு வெள்ளிக் கவசம் சாத்தி பிரார்த்தனை செய்து கொண்டார்கள். ஒன்பது மாதங்கள் முடிந்து பத்தாவது மாத ஆரம்பத்தில் அரசி அழகானப் பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அந்த அழகிய குழந்தையைக் கண்டு எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

சோதிடர்கள் அக் குழந்தையின் ஜாதகத்தைக் கணித்துவிட்டு ''இக் குழந்தையின் பெயர் 'அ'வில் ஆரம்பிக்க வேண்டும். அப்போதுதான் நல்லது. எனவே அபர்ணா என்று பெயரிடுங்கள்'' எனக் கூறவே அரச தம்பதிகள் அக் குழந்தைக்கு அபர்ணா என்று பெயரிட்டார்கள். ஆனால் அக் குழந்தை பிறந்த மூன்றாவது நாளிலேயே பார்வையை இழந்துவிட்டது. இதனால் அரச தம்பதிகள் சோகத்தில் ஆழ்ந்தனர்.

பார்க்கும் சக்தி இல்லாது போனாலும் அபர்ணா மிகவும் கெட்டிக்காரியாக விளங்கினாள். அவளது குரல் இனிது. மிக நன்றாகப் பாடக் கூடியவள். இப்படி எல்லாம் இருந்தும் அவளுக்கு எப்படித்தான் திருமணம் செய்து வைப்பது என்ற கவலையில் அவர்களது பெற்றோர்கள் மூழ்கினார்கள்.

ஒரு பெண் எவ்வளவுதான் அழகாக இருந்தாலும் அவள் பார்வையற்றவள் என்பதை அறிந்தால் அவளை யார் மணக்க முன்வருவார்கள்? அதனால் அபர்ணாவே தன் பெற்றோர்களிடம் ''நீங்கள் என் திருமணம் பற்றிக் கவலைப்படவேண்டாம். எல்



லாம் அந்த துர்க்கா தேவியே பார்த்துக் கொள்வாள்'' என்று கூறினாள்.

அவள் ஒவ்வொரு நாளும் மாலைப் போழுதில் தன் ஆருயிர் தோழியுடன் மலை மீதுள்ள துர்க்கையின் கோவிலுக்குப் போய் வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். தேவியை தரிசித்துவிட்டு ஆலயத்தினருகே உள்ள ஒரு பாறை மீது சற்று நேரம். அமர்ந்துவிட்டு அரண்மனைக்குத் திரும்புவதை வழக்கமாக அவள் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் மாலை ஆலயத்தில் தரிசனம் முடிந்த பின் அரசகுமாரியை வெளியே பாறை மீது உட்கார வைத்து அவளது தோழி அவளிடம் ஏதாவது பாட்டுப் பாடும்படி வேண்டினாள். அபர்ணாவும் துர்க்கா தேவியைத் துதிக்கும் பாடலைத் தன்




இனிய குரலில் பாட ஆரம்பித்தாள். அவளைப் பாட விட்டுவிட்டு அவளது தோழி அங்கிருந்து வேறு இடத்திற்குச் சென்றாள். அங்கு ஒரு சிலையைச் செதுக்கிக் கொண்டிருக்கும் சிற்பியைக் காணவே அவள் சென்றாள். அதற்குக் காரணம் அவள் அவனை விரைவில் மணக்கப் போவதுதான்.

அபர்ணாவின் இசை அங்கு வீசிய மெல்லிய பூங்காற்றில் நாலாபக்கமும் பரவிக் கொண்டிருந்தது. அப்போது அவ்வழியாக சூரியபுர இளவரசன் சூரியசேனன் வந்து கொண்டிருந்தான். அவன் ஒரு சிறந்த ஓவியன். அவன் யாரைப் பார்த்தாலும் உடனேயே அவரது உருவத்தைப் படமாக வரையும் சக்தி பெற்றவன். அவன் அழகிய அபர்ணாவைப் பார்த்ததும் அவளது உருவத்தை உடனே வரைந்து விட்டு அவளது இன்னிசையைச் சற்று தூரத்தில் மறைந்து நின்றவாறே ரசித்தான்.

இதற்குள் அபர்ணாவின் தோழி அங்கு வந்து ''அரசகுமாரி! நேரமாகி விட்டது. வாருங்கள் போகலாம்'' என்று கூறி அபர்ணாவை அழைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றாள். அவர்கள் பார்வையில் படாமல் நின்று கொண்டிருந்த சூரியசேனன் அவர்கள் பேசியதைக் கேட்டு அந்த அழகி அந்நாட்டு அரசகுமாரி என்று தெரிந்து கொண்டான்.

சூரியசேனன் அங்கிருந்து போய் தன் நாட்டை அடைந்தான். அன்றே அவனது தந்தை சந்திரசேனன் தன் மகன் சூரியசேனனிடம் ''நம் சக்கரவர்த்தி தன் ஒரே மகளான சுவர்ணாவை உனக்கு மணம் செய்து வைக்க விரும்புகிறார். அவளும் உன்னை மிகவும் விரும்புகிறாளாம். உன் அபிப்பிராயத்தை அவர் அறிய விரும்புகிறார். சக்கரவர்த்தி சிற்றரசராகிய நம்முடன் சம்மந்தம் செய்து கொள்ள விரும்புகிறார் என்றால் அது நமது அதிர்ஷ்டமே'' என்றான்.

சூரியசேனன் இரு ஆண்டுகளுக்கு முன் சக்கரவர்த்தியின் அரண்மனைக்குப் போய் அவரது குடும்பப் படத்தை வரைந்து கொடுத்தான். சக்கரவர்த்தி சூரியசேனன் ஓவியக் கலையில் கை தேர்ந்தவன் என்பதை அறிந்தவர். அதனால் தன் குடும்பப் படத்தை அவனைக் கொண்டு வரைய வைப்பது என எண்ணி அவனை வரவழைத்தார். அப்போது அவன் சுவர்ணாவைப் பார்த்திருந்தான். அதனால் சூரியசேனன்

சுவர்ணா எப்படி இருப்பாள் என்று நினைவுபடுத்திப் பார்த்துக் கொண்டு ''அந்த குண்டுப் பெண்ணையா நான் மணந்து கொள்ள வேண்டும்?'' என்று வெறுப்புடன் கேட்டான்.

அதைக் கேட்ட சந்திரசேனன் கோப மடைந்து ''நீ என்ன உன்னை மன் மதன் என்றா நினைத்துக் கொண்டிருக் கிறாய்? உன் கூன் முதுகையும் மாறு கண்ணையும் பற்றிக் கொஞ்சமாவது நினைத்துப் பார்த்தாயா?'' என்று கேட்டான். தன் தந்தையே தன்னைப் பற்றி இவ்வாறு கூறியது கேட்டு சூரிய சேனன் விரக்தியுடன் ''தந்தையே! நான் வேறொரு அரசகுமாரியை மணக்க விரும்புகிறேன். அவள் அனங்கபுரத்து அரசகுமாரி'' என்று அவன் கூறியதோடு தான் வரைந்த அவளது படத்தைத் தன் தந்தையிடம் காட்டினான்.

அதைப் பார்த்த சந்திரசேனன் அதில் லயித்துப் போய் சற்று நேரம் பேசாமல் இருந்தான். பிறகு அவன் ''மகனே! சக்கரவர்த்தியின் பேச்சுக்கு இணங்கா விட்டால் நாம் அவரது விரோதத்தைத் தான் சம்பாதித்துக் கொள்ள வேண்டி வரும். நாம் அவ ருக்கு அடங்கிய சிற்றரசர். நாம் அவர் சொல்வதை ஏற்கா விட்டால் நம் நாட்டையே இழக்க வேண்டிவரும் அதனால் நீ சுவர்ணாவை மணப்பது தான் உனக்கும் நல்லது. நம் குடும்பத் திற்கும் நல்லது. நம் நாட்டிற்கும் நல்லது. இதையெல்லாம் யோசித்துப் பார்'' என்றான்.

ஆனால் சூரியசேனன் ஒரே பிடி வாதமாக அனங்கபுர இளவரசி யையே மணக்க விரும்புவதாகக்



கூறவே சந்திரசேனன் அவளைப் பற்றி அறிந்து வரத் தன் ஆட்களை அந்த நாட்டிற்கு அனுப்பினான். அவர்களும் இளவரசி அபர்ணா வைப் பற்றி விவ ரங்கள் அறிந்து வந்து சந்திரசேன னிடம் கூறினார்கள்.

சந்திரசேனனும் தன் மகனிடம் ''மகனே! நீ அந்த அபர்ணாவைச் சற்று தூரத்திலிருந்து தான் பார்த் தாய். அவளுக்கு எதிரில் நின்று பேச வில்லை அல்லவா?'' என்று கேட்க சூரியசேனனும் 'ஆம். நான் இதுவரை அவளிடம் எதுவும் பேசவில்லை'' எனக் கூறினான். அப்போது சந்திர சேனன் ''அவள் பேரழகி என்பதில் ஐய மில்லை. ஆனால் அவள் பிறக்கும் போதே தன் பார்வையை இழந்து விட்டாள்'' என்று தெரிவித்தான்.

அதைக் கேட்ட சூரியசேனன் ஒரு

நிமிடம் மலைத்து நின்றான். பிறகு படத்தில் அபர்ணாவின் கண்களைப் பார்த்து விட்டு ''அப்படியானால் மிகவும் நல்லதாகப் போயிற்று. நான் அவளையேதான் மணக்கப் போகி றேன்'' என்றான். சந்திரசேனனும் ''சரி. உன் திருமணம் அபர்ணாவுட னேயே நடக்கும்'' எனக் கூறித் தன் மகனை ஆசீர்வதித்தான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''சந்திரசேனன் முதலில் சக்கரவர்த்தி யுடன் சம்மந்தம் செய்து கொள்ளா விட்டால் என்ன ஆபத்து நேருமோ என பயந்தானே. ஆனால் முடிவில் தன் மகன் அபர்ணாவை மணக்கச் சம்மதம் தெரிவித்ததோடு ஆசிகளும் கூறினானே. இது முரணானது தானே. தான் மணக்கப் போகும் பெண் பார்வையற்றவள் எனத் தெரிந்தும் சூரியசேனன் மிகவும் நல்லதாகப் போயிற்று என்றானே. அபர்ணா பார்வையற்றவளானதும், சூரிய சேனன் சக்கரவர்த்தியின் ஒரே மகளை மணக்காம லிருந்ததும் யாருடைய சாபங்களின் காரணத்தாலா? இந்த சந்தேகத்திற்குச் சரியான பதில் தெரிந் திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என் றது.

விக்கிரமனும் ''சக்கரவர்த்திக்கு முதலில் பயப்பட்ட சந்திரசேனன் தன் மகன் பார்வையற்ற பெண்ணை மணந்து கொள்வதைச் சக்கரவர்த்தி கேட்டு அவர் கண்டிப்பாக சூரிய சேனனைப் பாராட்டுவார் என எண்ணியே தன் மகனை வாழ்த்தி னான். சூரியசேனன்தான் மணக்கப் போவது பார்வையை இழந்தவள் என அறிந்ததும் ரொம்ப நல்லதாகப் போயிற்று எனக் கூறியது அவளால் அவனுடைய கண்ணையும் கூன் முது கையும் காண முடியாது என்பதா லேயே. அழகியான அவளுக்கு பார்வை மட்டும் இருந்திருந்தால் அவள் சூரியசேனனை மணக்க மறுத்தே இருப்பாள். இதெல்லாம் அவரவர் அதிர்ஷ்டப்படி நடப்ப தாலே அல்லாது ஒருவருடைய சாபத் தால் அல்ல'' என்றான்.

விக்கிரமனின் பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# கோளாறு எதில்?

பெரிய பண்ணை பெரியசாமியின் வீட்டில் கன்னம் வைத்து திருட முயன்ற குற்றத்திற்காக கருப்பன் இரண்டு வருட காலம் சிறை வாசம் செய்தான். அவனது தண்டனைக் காலம் முடிந்து விடுதலை நாளும் வந்தது. சிறைச்சாலை அதிகாரி அவனிடம் ''திருடுவது குற்றம் எனத் தெரிந்ததா? இனிமேலாவது திருடாமல் நல்லவிதமாக ஏதாவது தொழில் செய்து பிழை'' என்றான்.

கருப்பனும் ''ஐயா! திருடுவது குற்றம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே. ஆனால் என் குலத் தொழிலாயிற்றே. என் தந்தை, என் தாத்தா, முத்தாத்தா என்று எல்லோரும் செய்து வந்த தொழில். இதை மோசமானது என்று நான் கூறினால் அது என் வம்சத்தவரையே இழிவு படுத்துவது போலாகும்'' என்றான்.

அதைக் கேட்ட அதிகாரி ''சரி. சிறையிலிருந்து வெளியே போனதும் முதல் வேலையாக எதைச் செய்வாய்?'' என்று கேட்க அவனும் ''ஐயா! முதலில் காதை சுத்தம் செய்ய எண்ணிக் கொண்டிருக்கிறேன்'' என்றான். அதிகாரி ''காதை சுத்தம் செய்வாயா? என்ன, தமாஷ் செய்கிறாயா?'' என்று கோபத்துடன் கேட்டார்.

கருப்பனும் ''தமாஷ் இல்லை ஐயா! உண்மையாகத்தான். நான் பெரியசாமி வீட்டில் கன்னம் வைப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன் அவர் வீட்டில் ஏதோ எடுபிடி வேலை செய்யும் சாக்கில் போனேன். அப்போது இரும்புப் பெட்டி எங்கே இருக்கிறது என்று நான் பார்த்துக் கொண்டேன். கன்னம் எங்கு போட வேண்டும் என்று அந்த அறைக்கு வெளியே இடத்தையும் குறித்து வைத்தேன். கன்னம் வைத்த நாளன்று அந்தக் குறியைச் சரியாகப் பார்க்காமல் கன்னம் போட்டேன். அது இரும்புப் பெட்டியின்

—எஸ். சோபினி—

பக்கத்தில் அமையாமல் நேராக இரும்புப் பெட்டியின் பின்புறத்தில் சென்றது. இரும்புக் கன்னக் கோல் 'டங்' கென இரும்புப் பெட்டியின் பின்புறத்தைத் தாக்கியது. அந்த அமைதியான இரவில் ஒரு பெரிய வெண்கல மணி அடிப்பது போல ஓசை அதனால் கிளம்பியது. அடுத்த விநாடியே பெரியசாமி தன் ஆட்களோடு ஓடி வந்து என்னைப் பிடித்து விட்டார்'' என்றான்.

அந்த அதிகாரியும் ''அது சரி. கன்னம் தவறுதலான இடத்தில் வைத்து விட்டாய். அதற்கும் காதை சுத்தம் செய்து கொள்வதற்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டார். அதற்கு கருப்பன் ''அதைத்தான் சொல்ல வந்தேன். பெரியசாமி என்னைப் பிடித்து இரண்டு அடிகள் கொடுத்த பின் ''ஏண்டா! இரும்புப் பெட்டியைத் தாக்கி 'டங்' 'டங்'கென்று ஒலியை உண்டாக்கினால் கூட நான் கும்பகர்ணன் போலக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பேன் என்று நினைத்தாயா?'' என்று கேட்டார். அப்போது என் மனதில் நான்தான் செவிடாகி விட்டேனோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. சிறைக்கு வந்த பின் தினமும் ஒரு குச்சியில் பஞ்சைச் சொருகிக் காதுகளைச் சுத்தம் செய்து வரலானேன். இப்போது சிறு சத்தத்தைக் கூட மிக நன்றாக என்னால் கேட்க முடிகிறது. அதனால் காது சுத்தம் செய்வதை விடக்கூடாது என்று எண்ணினேன்'' என்றான்.

அதைக் கேட்ட சிறை அதிகாரி ''அட முட்டாளே! நீ ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்ளவில்லை. நீ சுவரில் முதலில் குறித்து வைத்த அடையாளத்தை அன்றிரவு சரியாகப் பார்க்கவில்லை. அதனால் கோளாறு உன் காதில் அல்ல, கண்களில்தான் இருக்க வேண்டும்'' என்றார். கருப்பனும் ''ஐயா! இப்படிக் காதும் கேளாமல் கண்ணும் தெரியாமல் இருக்கும் நான் இனி திருடவா முடியும்? நீங்களே பண்ணையார் பெரியசாமியிடம் சிபார்சு செய்து ஒரு வேலை வாங்கிக் கொடுங்கள். நான் ஒழுங்காக இருந்து வேலை செய்கிறேன்'' என்றான்.

அதிகாரியும் அவன் திருந்தியது கண்டு கருப்பன் கேட்டுக் கொண்டபடி பெரியசாமியிடமே வேலை வாங்கிக் கொடுத்தார்.








# சோழ மண்டலக் கடற்கரையில் மேலும் சற்று தூரம்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**

சென்னையிலிருந்து சற்று தூரம் வடக்கே சென்றதும் தென் ஆசியாவின் மிகப் பெரிய கடல் ஏரிகளில் ஒன்றான பழவேற்காடு ஏரியை அடையலாம் இது வங்கக் கடலால் உருவாக்கப் பட்ட உப்பு நீர் ஏரி. இது தமிழ் நாடு, ஆந்திர மாநில எல்லையில் உள்ளது இதிலுள்ள சிறு தீவுகளில் சுண்ணாம்புக் கிளிஞ்சல்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. பழவேற்காட்டில் 1976ல் பறவைகளின் சரணாலயம் அமைக்கப்பட்டது. இங்கு பல நாட்டுப் பறவைகளும் அவ்வப்போது வந்து போகின்றன.



பழவேற்காடு என்ற ஊரில்தான் டச்சுக்காரர்கள் இப்பகுதியில் முதலில் குடியேறினார்கள் இந்த ஏரியின் பெரும் பகுதி ஆந்திர மாநிலத்தில் உள்ளது இந்த மாநிலம் நம் நாட்டிள் பெரிய மாநிலங்களில் ஐந்தாவது இடத்தைப் பெறுகிறது. நம் நாட்டில் அமைக்கப் பட்ட முதலாவது மொழி வாரி மாநிலம் இதுவே. ஆந்திர மாநிலம் மலைப் பகுதிகளைக் கொண்டுள்ள நீண்ட கடற்கரையை உடையது. இக் கடற்கரைப் பகுதியைப் புயல்கள் அவ்வப் போது தாக்குகின்றன. இவற்றால் பல



**கடற்கரையில் மீனவர்களின் குடிசைகள்**

கிராமங்களும் ஊர்களும் பெரும் சேதத்தை அடைகின்றன.

பழவேற்காடு ஏரிக்கு வடக்கே நெல்லூர் மாவட்டத்தில் ஸ்ரீஹரிச் கோட்டா தீவு உள்ளது. இந்திய விண்வெளி ஆராய்ச்சிக் கழகத்தின் ராக்கட் அனுப்பும் மையம் இது. இங்கிருந்து தான் ரோஹிணி என்ற முதலாவது ராக்கெட் 1971 அக்டோபர்-9ல் விண் வெளியில செலுத்தப்பட்டது. இதுவரை இங்கிருந்து 400 ராக்கெட்களும் 11 செயற்கைக் கோள் கலங்களும் அனுப்பப் பட்டுள்ளன. பெரிய விண் வெளிக் கலங்களை அமைக்கப் புதிய மேடை அமைக்கப் பட்டு வருகிறது.

இங்கு யாநாடிகளென்ற பழங்குடி மக்கள் வசித்து வேட்டையாடி வந்தனர். இவர்கள் ஸ்ரீஹரிக் கோட்டாக் காடுகளில் திரிந்து வந்தனர். தற்போதும் இவர்களில் சிலர் நெருப்பு மூட்ட சிக்கி முக்கி கற்களைப் பயன் படுத்துகிறார்கள்.



**ராக்கட் செலுத்தப் படுதல்**

ஆந்திரப் பிரதேசத்தில் நெல்லூர் மாவட்டத்தில்



தான் மைக்கா தயாரிக்கப்படுகிறது. நெல்லூர் நெல் வயல்களுக்குப் பெயர் போனது. தெலுங்கில் மகாபாரதத்தைஎழுதிய மூன்று கவிஞர்களுள் இரண்டாவதரான கவிப் பிரம்மம் திக்கன்ன சோமாயாஜி பிறந்த இடமும் நெல்லூரே. காகதீய கணபதி மன்னரின் சிற்றரசராக 12ம் நூற்றாண்டில் வாழ்ந்த மனுமசித்தியின் அவையில் கவிஞர் திக்கன்னா. கவிஞர் நன்னைய்யபட்டர் எழுத ஆரம்பத்த மகாபாரதத்தில் திக்கன்னா பதினைந்து பர்வங்களை எழுதினார். இவர் அமர்ந்து மகாபாரதத்தை எழுதிய சிறு கோவில் இன்று சிமிண்ட் வைக்கப்படும் கிடங்காக உள்ளது!

ஆந்திராவின் இரு ஜீவ நதிகளான கோதாவரியும் கிருஷ்ணாவும் தம் டெல்டாப் பகுதிகளை வளமுள்ளதாக்கி தென்னிந்தியாவின் களஞ்சியம் என்ற பெயரை அடையச் செய்துள்ளன. கிருஷ்ணாவின் ஒரு உப நதி கூச்சி பூடி என்ற ஊர் வழியே பாய்கிறது. இந்த ஊர் கூச்சிப்பூடி நடன கலைக்குப் பிறப்பிடம்.

இதனை ஒரு சாதுவான சித்தேந்திர யோகி என்பவர் 17ம் நூற்றாண்டில் ஆரம்பித்து பாரிஜாத ஹரணம் என்ற நாட்டிய நாடகத்தை இயற்றி கூச்சிப் பூடியின் சில சிறுவர்களுக்குக் கற்பித்தார். சத்திய பாமாவின் வேண்டுகோளின் பேரில் கிருஷ்ண பரமாத்மா பூவுலகிற்குப் பாரிஜாத மரத்தைக் தேவலோகத்திலிருந்து கொண்டு வந்த கதை பாரிஜாத ஹரணம்.



**கூச்சிப்பூடி நடனக் கலையில் புகழ் பெற்ற குரு வேம்படி சின்னசத்யம்**

இந்த நாட்டிய நாடகம் கோல் கொண்டாவை ஆண்ட கலாரசிகரும் கடைசி நவாப்புமான அப்துல் ஹசன் தானாஷாவின் முன் நடித்து ஆடிக் காட்டப்பட்டது. இதனால மகிழ்ந்த நவாப் கூச்சி பூடி கிராமத்தை சித்தேந்திர யோகிக்கும் அவருடைய நடனக் குழுவினருக்கும் இனாமாக அளித்து அந்த நடனக் கலையை வளர்க்க வேண்டுமென்ற நிபந்தனையையும் விதித்தார். சித்தேந்திர யோகியும் தன் சீடர்களிடம் அவர்களும் அவர்களது சந்ததியாரும் அக்கிராமத்திலேயே வாழ்ந்து அந்த நடனக் கலையை வளர்க்கவும் சத்தியப் பிரமாணம் வாங்கிக் கொண்டார். அது மட்டுமல்ல, அக் குடும்பங்களின் ஆடவர்கள் தம் வாழ் நாளில் ஒரு முறை யாவது பாரிஜாத ஹரணத்தில் சத்திய பாமாவின் வேடம் பூண்டு நடனமாடுவதாகவும் சத்தியம் வாங்கிக் கொண்டார். இன்றும் இந்த நடனம் பல மாற்றங்களை அடைந்த தோடு பெண்களும் கூச்சிப் பூடி நடனம் ஆடுகிறார்கள்.



**ராஜா ரெட்டியும் ராதா ரெட்டியும்**

கிருஷ்ணாநதி கடலில் சேரும் இடத்தில் பழங்காலத்துப் புகழ் பெற்ற மசூலிப் பட்டணத்துறைமுகம் உள்ளது. இது 1680ல் டச்சுக்காரர் வசம் இருந்தது. 1750ல் பிரஞ்சுக்காரர்கள் இதைக் கைப் பற்றினார்கள். ஒன்பது ஆண்டுகளுக்குப் பின் இது ஆங்கிலேயர் வசமாயிற்று. அதன் பின் இது முக்கியத்துவம் பெறலாயிற்று ஆனால் 1864 நவம்பர் முதல் தேதியன்று அடித்த புயலில் படு சேதமுற்றுத் தன் பொலிவை இழந்தது. இப்போது ஒரு சிறு துறைமுகமாகிவிட்டது.

இந்திய விடுதலைப் போரில் மசூலிப் பட்டணம் முக்கிய பங்கு பற்றியது. காடி செர்லா ஹரிசர்வோத்தமராவ் என்னும் சுதந்திரப் போராட்ட வீரர் சுதேசி இயக்கத் தில் ஈடுபடுத்த இளைஞர்களுக்காக ஆந்திர ஜாதீய கலாசாலையை நிறுவி னார். நமது தேசியக் கொடியை அமைத் துக் கொடுத்தவர் பிங்களி வெங்கய்யா எனவும் கருதப்படுகிறது.



**பிங்களி வெங்கய்யா தயாரித்த மூவர்ண தேசியக் கொடி**

மசூலிப்பட்டணம் கலம்காரி என்ற ஓவியக் கலைக்குப் பெயர் போனது. இது கி.மு. 6வது நூற்றாண்டிலிருந்து அழியாது இருந்து வருகிறது. கலம் காரி என்றால் பேனாவின் வேலை என்று பொருள் புராணக்கதைச் சம்பவங்களை பேனா போன்ற தூரிகைகளைக் கொண்டு துணிகளில் மீது ஓவியங் களைத் தீட்டி வருகிறார்கள். தற்போது பழங்காலப் பேனாக்கள் போய் மரக்கட்டை அச்சுகள் பயன் படுத்தப்படுகின்றன.



# மனதை மாற்றிய மூக்குத்தி!

தகட்டூரில் தங்கப்பன் என்ற இளைஞன் இருந்தான். அவன் தன் இளம் வயதிலேயே தன் தாய் தந்தையரை இழந்து விட்டான். அதனால் அவனது பாட்டி, கஷ்டப்பட்டு வேலை செய்து அவனை வளர்த்துப் பெரியவனாக்கினாள். வளர்ந்து வாலிபனாகியும் தங்கப்பன் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாகச் காலம் கழிக்கலானான்.

அவனது பாட்டிக்கும் வயதாகி முன் போல் வேலை செய்ய முடியவில்லை. ஆனால் தங்கப்பன் ஒரு வேலையும் செய்யாமல் தன்பாட்டி ஏதேதோ வேலைகளைச் செய்து சம்பாதித்து வந்த பணத்தில் சாப்பிட்டுப் பொழுது போக்கி வந்தான். இதைக் கண்ட ஊரார் தங்கப்பனைக் கடிந்து கொண்டு அவனை ஏதாவது ஒரு வேலை செய்து பாட்டியைக் காப்பாற்றி வருமாறு கூறினார்கள். அவனோ வெட்டிப் பொழுது போக்கியதால் எந்தத் தொழிலையும் கற்கவில்லை. விறகு வெட்டவோ, வயலில் வேலை செய்யவோ, தோட்ட வேலை செய்யவோ அவனுக்குத் தெரியாது. அதனால் பணம் சம்பாதிக்க என்ன வழி என்று யோசித்து அவன் திருடப் போவது என எண்ணினான். ஆனால் பிடிபட்டால் என்ன நடக்குமோ என எண்ணி பயப்படலானான்.

ஒரு நாளிரவு அவன் அவ்வூர் அம்மன் கோவிலில் போய்ப் படுத்தான். அப்போது சுற்றிலும் யாரும் இல்லாதது கண்டு அவன் மெதுவாக எழுந்து அம்மனின் விக்கிரத்தருகே சென்றான். அம்மனின் மூக்கிலிருந்த வைர மூக்குத்தியை நடுங்கும் கைகளால் கழற்றி எடுத்துக் கொண்டான். அப்போது அவன் ''தாயே! இதன் விலையில் பாதியை உன் உண்டியில் போட்டு விடுகிறேன். என்னைக் காவலதிகாரிகள் பிடிக்காமலிருக்க மட்டும் அருள்

—எஸ். சோபினி—



புரி'' என்று வேண்டிக் கொண்டான். பிறகு மூக்குத்தியைத் தன் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு தன் வீட்டிற்கு வந்து விட்டான்.

மறுநாள் காலை அம்மனின் மூக் குத்தி திருடு போய் விட்டதென்று ஊர் முழுவதும் தெரிந்து கொண்டது. அதைத்திருடியவனைக்கண்டு பிடிக்க ஊரில் பலர் முயற்சிகளை மேற் கொண்டார்கள். தங்கப்பன் துணிச்ச லோடு மூக்குத்தியைத் திருடி விட் டாலும் அவன் மனதில் தான் செய் தது பெரும் குற்றம் என உறுத்திக் கொண்டிருந்தது. யாராவது அவனைக் கூப்பிட்டால் மூக்குத்தியைப் பற்றி விசாரிக்கத்தானோ என்று அவன் பயப் படலானான்.

ஒருவாரம் கழிந்தது. தன்னை யாரும் சந்தேகிக்கவில்லை என்று தங்கப்பன் எண்ணி அந்த மூக்குத் தியை எப்படி விற்பது என்று யோசிக்கலானான். முதலில் அவன் அவ்வூரில் பொன் நகை செய்யும் பூதலிங்கத்தைக் கண்டு ''ஐயா. நான் கேட்கிறேனே என்று வேறு விதமாக நினைக்காதீர்கள். ஒரு பேச்சுக்குத் தான் கேட்கிறேன். நீங்கள் திருட்டு நகைகளை வாங்குவது உண்டா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட பூதலிங்கம் ''திருட்டுச் சொத்தை நானா வாங்கு வேன்? மாட்டவே மாட்டேன். அந்த வேலைத்தனம் எல்லாம் அடுத்த ஊரிலுள்ள அங்குசாமிதான் செய் வான். அவன் எந்தத் திருட்டு சாமான் களையும் வாங்குபவன்'' என்றான். தங்கப்பனும் ''ஒருவேளை அம்ம னின் மூக்குத்தியைத் திருடியவன். இங்கு வந்து ஏதாவது கேட்டானோ என்று தெரிந்து கொள்ளவே நான் கேட்டேன். கோபித்துக் கொள்ளா தீர்கள்'' என்றான் குழைந்தவாறே.

பூதலிங்கமும் ''உன் மேல் கோபமா? அந்தத் திருட்டுப் பயல் மட்டும் கிடைத்தால். இந்த சுத்தி யால் அவன் மண்டையைத் தட்டி இரண்டாகப் பிளந்து விடுவேன்'' என்று தன் கையிலிருந்த சுத்தியலை ஆட்டிக்கொண்டே கூறினான். தங்கப் பனும் ''ஆமாம். அவன் மட்டும் கிடைத்தால் லேசில் விட்டு விடக் கூடாதுதான்'' எனக் கூறிவிட்டு அங் கிருந்து சென்றான்.

மறுநாளே தங்கப்பன் அம்மனின் மூக்குத்தியை அடுத்த ஊர் அங்கு சாமியிடம் விற்க எண்ணிக் கிளம் பினான். வழியில் பழனியப்பன்

அவனை நிறுத்தி சட்டைப் பையிலிருந்து சுருட்டை எடுத்தாவாறே ''உன்னிடம் நெருப்புப் பெட்டி இருந்தால் கொடு'' என்று கேட்டான். தங்கப்பனும் ''நான் புகை பிடிப்பதில்லை'' எனப் பட படக்கும் மனத்துடன் கூறிவிட்டு முன் சென்றான். பழனியப்பன் மூக்குத்தி பற்றித்தான் கேட்பானோ என பயந்ததே அதற்குக் காரணம்.

அவன் அடுத்த ஊருக்குள் போன போது காவல் வீரர்கள் இருவரைக் கட்டி இழுத்துப் போவதைக் கண்டான். அதை கண்டு வழியில் போன ஒருவரிடம் ''இவர்களைக் காவல் வீரர்கள் ஏன் இழுத்துச் செல்கிறார்கள்? யார் இவர்கள்?'' என்று கேட்டான். அவரும் ''அந்த மீசைக்காரன் திருட்டுப் பொருள்களை வாங்கும் அங்குசாமி. மற்றவன் யாரோ தெரியாது. அவன் இந்த அங்குசாமிக்கு ஏதோ திருட்டுப் பொருளை விற்றிருக்கிறான். அதனால் காவல் வீரர்கள் திருட்டுப் பொருள் விற்றவனையும் வாங்கினவனையும் பிடித்து இழுத்துக் கொண்டு போகிறார்கள்'' என்றார்.

இதைக் கேட்டதும் தங்கப்பனுக்கு உதறல் கண்டது. சட்டைப் பைக்குள் இருந்த அம்மனின் மூக்குத்தி பெரும் பாரமாக அவனுக்குத் தோன்றியது. திருட்டுக் குற்றம் வெளிப்பட்டால் ஒருவனது நிலை என்ன ஆகும் என்று அப்போது அவன் தெரிந்து கொண்டான். அவன் சற்றும் தாமதிக்காமல் உடனேயே தன் ஊருக்குத் திரும்பி வந்து விட்டான்.

அவன் அம்மனின் கோவிலுக்கு



போய் ''தாயே! நான் திருடன். மகா பாவி. என்னை மன்னித்து விடு'' என்று கதறி அம்மனின் மூக்குத்தியை அந்த விக்கிரகத்தின் மூக்கிலேயே வைத்து விட்டு வந்து விட்டான். இப்படிச் செய்த பிறகுதான் தனது மனதிலிருந்த பெரிய பாரம் இறங்கியது போல அவன் உணர்ந்தான்.

அன்றிரவு கவலையற்று அவன் படுத்துக் கொண்டான். அப்போது அவன் மனதில் திடீரென ஒரு சந்தேகம் தோன்றியது. ''நான் திருட்டுக் குற்றத்திற்காக அகப்படாமலேயே இருந்தால் மூக்குத்தி விலையில் பாதியை உண்டியலில் போடுவதாக வேண்டிக் கொண்டேனே. நான் பிடிபடவில்லை. மூக்குத்தியையும் அம்மனுக்கே கொடுத்து விட்டேன். ஆனால் வேண்டுதலின்படி பணம் கோவில்

உண்டியலில் போடா விட்டால் அம்மன் எனக்கு ஏதாவது தண்டனை கொடுப்பாளோ?'' என்று அவன் மனம் எண்ணலாயிற்று.

அம்மனிடம் வேண்டிக் கொண்ட படி பணம் உண்டியலில் போட வேண்டுமென்றால் தான் ஏதாவது ஒருவேலை செய்து கஷ்டப்பட்டு சம்பாதித்ததாக வேண்டுமென அவன் எண்ணினான். அதனால் அவ்வூர் பெரிய பண்ணையார் பெரியசாமி யிடம் போய் ''ஐயா! எனக்கு ஏதாவது ஒருவேலை போட்டுக் கொடுங்கள். நீங்கள் திருப்திப் படும்படி உழைக் கிறேன்'' என்றான்.

பெரியசாமியோ ''நீ சோம்பேறி, உனக்கு ஒருவேலையும் செய்யத் தெரி யாதே. உன்னால் என்ன வேலை செய்ய முடியும்? ஏர் பிடித்து உழ முடியுமா? நாற்று நடத் தெரியுமா? களை எடுக்கத் தெரியுமா? அறுவடை தான் செய்யத் தெரியுமா? ஒன்றுமே தெரியாதே'' எனவே தங்கப்பனும் ''நான் வேலை செய்கிறேன். நீங்கள் தான் என்னைக் காப்பாற்ற வேண் டும்'' என்று அவரது கால்களில் விழுந்து கெஞ்சினான். அவரும் இரக் கப்பட்டு ''சரி. நீ என் வயல்களுக்கு கிணற்றிலிருந்து நீர் இறைத்துப் பாய்ச்சு. இதைச் செய் பார்க்கலாம்'' என்றார். தங்கப்பனும் அந்த வேலையை முழு மனதுடன் செய்து வரலானான்.

தன் பேரன் திருந்தி வேலை செய்து வருவது கண்டு தங்கப்பனின் பாட்டி மகிழ்ந்தாள். பெரியசாமியும் அவனது வேலை செய்யும் திறன் கண்டு ''தங் கப்பா! இப்போதெல்லாம் நீ முன் போல இல்லை. நன்றாக உழைக் கிறாய். வேலையில் முழு மனதுடன் ஈடுபடுகிறாய்'' எனக் கூறி அவனைத் தன் பண்ணையாட்களில் ஒருவனாக ஆக்கிக் கொண்டு நல்ல சம்பளமும் போட்டுக் கொடுத்தார். தங்கப்பனும் தனக்குக் கிடைத்த முதல் மாத சம் பளத்தில் பாதியை அம்மன் கோவில் உண்டியலில் போட்டான். தான் உழைத்து சம்பாதிப்பதால் கிடைக்கும் மன நிறைவைக் கண்டு அவன் மன தின் ''நல்ல வேளை. நான் ஒரு திருட னாக ஆகி விடவில்லை. எல்லாம் அம்மனின் அருள்'' என எண்ணித் தன் நன்றியை மனதிற்குள் சொல்லித் தெரிவித்துக் கொண்டான்.





# பொன்மயமான பொழுதுகள் 13

## உலகில் இவற்றை எங்கு காண்பீர்கள்?

1. 17000 ஆண்டுகள் பழமையானதும் 600 சுவர் ஓவியங்களையும் கொண்ட குகைகள், இவற்றுள் மிகப் பெரியதான 'காளைகள் கூடம்' மிகப் புகழ் பெற்றது.





2. இந்த ஒன்பது அடுக்கு கோபுரத்தை ராணா கும்பா 1440ல் கட்டினார். 36 மீ. உயரமுள்ள இது அந்த ரஜபுத்திர மன்னரது 'வெற்றிக் கம்பம்' எனப் புகழ் பெற்றது.



3. மிகவும் வெப்பமான ஆப்பிரிக்கப் பகுதி ஒன்றில் இந்த மலையின் உச்சி பனியால் மூடப்பட்டும் இதன் சரிவுகள் பனி படர்ந்தும் உள்ளன.

4. ஜிராபி மங்கைகள்! இவர்கள் பாடௌங் என்ற மலைச் சாதியினர் கழுத்தில் பித்தளை வளையங்கள் மூன்று வயதிலிருந்தே அணிந்து வருபவர்கள். இது அழகிற்காக எனக் கருதப்படுகிறது. அவர்கள் வளரவளர கழுத்தில் மேலும் ஒவ்வொரு வளையமாகக் கூட்டி அணிந்து கழுத்தை நீள மாக்கிக் கொள்கிறார்கள்.



5. 860 கி.மீ நீள மர அறைகளைக் கொண்ட இந்த நூலகத்தில் 2 கோடி புத்தகங்கள் உள்ளன. மூன்று கட்டடங்களில் அமைந்துள்ள இந்த நூலகத்தில் 40 லட்சம் வரை படங்களும் 90 லட்சம் புகைப் படங்களும் 13 லட்சம் இசை ஒலித்தட்டுகளும் உள்ளன.



# காட்டு வீரன்

## படக் கேள்வி

ஒரு குரங்கு மனிதன் ஆப்பிரிக்கக் காட்டின் மரக்கிளைகளுக்கு தாவிச் செல்வது ஒரு புலியை கோபமடையச் செய்கிறது. இந்தப் படத்தில் ஏதோ ஒரு தவறு உள்ளது. அது என்ன என்று உங்களால் கண்டு பிடித்து கூற முடியுமா?

## படப் புதிர்

ஒன்பது நாடுகளின் இப் படங்களில் அவற்றின் பெயர்கள் இடம் மாறி எழுதப்பட்டுள்ளன நீங்கள் அவற்றில் சரியான பெயர்களை எழுதிக் காட்டுகிறீர்களா?





## வேடிக்கை வினாக்கள்

1. என்னிடம் இரண்டு நாணயங்கள் உள்ளன. அவற்றின் மதிப்பு 55 பைசாக்கள். அவற்றின் ஒன்று அரை ரூபாய் நாணயம் அல்ல. அந்த இரு நாணயங்கள் யாவை?
2. இந்தக் கிளி அது கேட்கும் ஒவ்வொரு வார்த்தையையும் அப்படியே திருப்பிச் சொல்லும் என்றார் பறவை விற்பவர். ஒருவர் அதை வாங்கிக் கொண்டு போய் அதற்குப் பேசக் கற்றுக கொடுக்க முயன்றார். ஆனால் அது ஒரு வார்த்தை கூடக் கூறவில்லை. ஆனால் அதை விற்றவன் கூறியது உண்மையே. எப்படி என்று நீங்கள் விளக்கு வீர்களா?



3. திரு ராவ் தம்பதியினருக்கு மூன்று புதல்விகள் உள்ளனர். அந்தப் புதல்விகள் ஒவ்வொருவருக்கும் ஒரு சகோதரன் இருக்கிறான். அக் குடும்பத்தில் மொத்தம் எத்தனை பேர் உள்ளனர்?
4. கிரீன்லாந்து கண்டுபிடிக்கப்படுவதற்கு முன் எது உலகின் மிகப் பெரிய தீவாக இருந்தது?
5. நீங்கள் ஒரு நண்பரை இருமுறை ஒரு திரைப் படம் காண அழைத்துப் போவதால் செலவு குறைவா அல்லது ஒரே முறையில் இரு நண்பர்களை அழைத்துச் செல்வதால் செலவு குறைவா?



6. ஒரு பெட்டியில் ஐந்து ஆப்பிள்கள் உள்ளன. இவற்றை ஐந்து பெண்களுக்கு ஆளுக்கு ஒரு ஆப்பிள் வீதம் கொடுத்தும் பெட்டியில் ஒரு ஆப்பிள் மீதம் இருக்கும்படிச் செய்ய முடியுமா?
7. உண்மையும் பொய்யும் கூறுபவர்களின் கூட்டம் ஒன்றில் ஒருவர் தாம் சற்று முன் ஒரு பெண் அவள் பொய் சொல்பவள் எனக் கூறியதை ஒட்டுக் கேட்டதாகக் கூறினார் அந்த மனிதர் பொய் கூறுபவரா அல்லது உண்மை கூறுபவரா?
8. இராணுவத்தில் யார் மிகப் பெரிய பூட்ஸை அடைகிறார்?

*செயல்பாடு*

## மலர்ப் பாண்டம்

**தேவையானது:**

ஒரு காலி பாட்டில், கோழி முட்டை ஓடுகள், பசை, வண்ணம்.

**செய்முறை:**

முட்டை ஓடுகளை சோப்பால் கழுவி சுத்தம் செய்து கொள்ளவும்

அவற்றை சிறு துண்டுகள் ஆக்கவும்.

பசை கொண்டு அத்துண்டுகளை பாட்டிலில் ஒட்டவும்

அவற்றின் மீது நல்ல வண்ணங்களை பூச அழகிய மலர்ப் பாண்டம் கிடைத்துவிடும்.





**ஒரு பூனை எலிக்காகக் காத்திருக்கிறது**





**மிகவும் பசித்திருக்கும் குஞ்சுப் பறவை**

## பொன்மயமான பொழுதுகள் 12ன் விடைகள்

### உலகில் எங்கு?

1. தென் அமெரிக்காவில் ஈக்வடாரின் காலட்கோ தீவுகள்.
2. வாடிகன் நகரம்.
3. பெருவிற்கும் பொலிவியாவிற்கும் இடையே உள்ள எல்லையில் டிட்டிகாகா ஏரி உள்ளது.
4. ஆஸ்திரேலியாவின் சிட்னி துறை முகத்தின் குறுக்கே.
5. ராஜஸ்தானில் தேஷ்நோக்.

### படப் புதிர்

அவன் கடலில் குதிக்கு முன் ஆடைகளைக் களைந்து வைத்ததாகக் கூறினான். அப்படியானால் பிஸ்கட்களைப் போடச் சட்டைப் பை ஏது?

### வேடிக்கை வினாக்கள்

1. அதன் மீது ஒருவன் சவாரி செய்யும் போது.
2. தராசு பழுதடைந்த போது.
3. பக்கத்தைத் தலை கீழாகப் பிடித்து கிடைக்கும் எண்களைக் கூட்டுவதால்!
4. பாம்புக்கு கண் இமைகள் இல்லை. அதனால் அது கண்களை மூடிக் கொள்ள முடியாது.
5. இரண்டு யானைகள் அடுத்தடுத்து நிற்கும் போது.
6. கடியாரம்
7. பாட்டில்.
8. கதை உண்மையல்ல. போர் வீரனுக்கு ஒரு கை தான் இருந்தது. அதனால அந்தக் கையை அவனால் மற்ற கையால் வெட்ட முடியாது.




பாண்டவர்கள் சைந்தவனைத் தோற்கடித்து அனுப்பிய பின் காம்யக வனத்திலேயேதான் இருந்தார்கள். அப்போது அவர்களைக் காண மார்க்கண்டேய முனிவர் வந்தார். அவரிடம் தருமர் "நாங்கள் படும் கஷ்டத்தோடு துரௌபதியும் அல்லவா கஷ்டப்படுகிறாள். இந்த மாதிரி வேறு எந்தப் பதிவிரதை யாவது கஷ்டப்பட்டது உண்டா?" என்று கேட்டார்.

அப்போது மார்க்கண்டேயர் "உங்களுக்கு மகா பதிவிரதையான சாவித்திரியின் கதையைக் கூறுகிறேன். கேளுங்கள்" என்று கூறிக் கதை சொல்லலானார்.

மத்திர தேச மன்னன் அசுவபதி. அவனுக்குக் குழந்தையே பிறக்கவில்லை. அதனால் அவன் கடும் விரதம் மேற்கொண்டு சாவித்திரி தேவியை உபாசனை செய்தான். அவன் செய்த ஹோம குண்டத்திலிருந்து சாவித்திரி தேவி வந்து அவன் முன் தோன்றி என்ன வரம் வேண்டுமென்று கேட்டாள். அசுவபதியும் "என் வம்சம் தழைக்க எனக்குப் புதல்வர்கள் பிறக்க அருள வேண்டும்" என்று வேண்டினான்.

சாவித்திரி தேவியும் "மன்னா! உன் நிலை பற்றி பிரம்ம தேவரிடம் விவாதித்தேன். அவர் உனக்கு ஒரு மகளை மட்டும் கொடுக்கும்படிக் கூறினார். எனவே அதுதான் நடக்கும்" எனக் கூறி அவனை ஆசீர்வதித்து விட்டு மறைந்தாள்.

அசுவபதியும் அந்த வரத்தால் திருப்தி அடைந்து அரண்மனைக்கு வந்தான். கொஞ்ச நாட்களில் அவனது மனைவி மாளவியும் கர்ப்பமுற்று உரிய காலத்தில் ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள். சாவித்திரி தேவியின் அருளால் கிடைத்த அக்குழந்தைக்கு அசுவபதி சாவித்திரி என்றே பெயரும் வைத்தான்.

—சாவித்திரி சத்தியவான் கதை—



சாவித்திரியும் வளர்ந்து அழகிய பெண்ணாக தேவ கன்னிகை எனக் கூறத் தக்க விதத்தில் இருந்தாள். ஒரு நாள் அசுவபதி தன் மகளிடம் ''மகளே! உனக்குத் திருமண வயது வந்து விட்டது. எக்காரணத்தாலோ உன்னை மணக்க எந்த அரசகுமாரனும் இதுவரை வரவில்லை. அதனால் நீயே ஒருவனைத் தேர்ந்தெடு. அவனையே நான் மணம் செய்து வைக்கிறேன்'' என்றான்.

சாவித்திரி தனக்கு ஏற்ற கணவனைத் தேர்ந்தெடுக்க ரதத்தில் அமர்ந்து ராஜரிஷிகளுள்ள ஆசிரமங்களுக்குப் புறப்பட்டாள். ஒருநாள் நாரதர் அசுவபதியைக் காண வந்தார். அப்போது சாவித்திரியும் பல ஆசிரமங்களுக்குப் போய் விட்டுத் திரும்பி வந்தாள். அவள் நாரதரையும் தன் தந்தையையும் வணங்கி ''தந்தையே! நான் எனது கணவர் யாரெனத் தேர்ந்தெடுத்து விட்டேன். அவர் சால்வ தேசத்தின் மன்னனான துயுமத்சேனரின் மைந்தரான சத்தியவான். அந்த மன்னருக்குப் பார்வை திடீரெனப் போய் விட்டது. அதனால் எதிரிகள் அவரது நாட்டைக் கைப்பற்றிக் கொண்டு பல வருடங்களுக்குமுன் அவரையும் அவரது மனைவியையும் குழந்தையாக இருந்த மகனையும் நாட்டை விட்டுத் துரத்தி விட்டார்கள். அவர்கள் இப்போது காட்டில் வாழ்கிறார்கள். அவர்களது புதல்வர் தான் சத்தியவான். அவரையே என் மனதில் என் கணவராக வரித்து விட்டேன். இனி நீங்கள் அவரை எனக்கு முறைப்படி மணம் செய்து வைக்க வேண்டும்'', என்றாள்.

அதைக் கேட்ட நாரதர் ''சத்தியவான் நற்குணங்கள் படைத்தவனே. உண்மையே பேசுபவன். கலைஞன் அழகானவன்தான். ஆனால் அவன் உயிர் வாழ்வது இன்றிலிருந்து சரியான ஒரு வருடத்திற்கே. எனவே இது பற்றி யோசிக்க வேண்டும்'' என்றார். அசுவபதியும் தன் மகளிடம் ''கேட்டாயா சாவித்திரி! நீ இன்னும் ஒரு வருடத்தில் இறக்கப் போகும் ஒருவனையா மணக்கப் போகிறாய்? வேண்டாம். வேறு யாரையாவது மணந்து கொள்'' என்றான்.

சாவித்திரியோ ''நான் என் மனதில் அவரை என் கணவராக வரித்து விட்டதால் என்னால் வேறு யாரையும் என் கணவராக நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. அதனால் என்னை அவருக்கே மணம் செய்து வைத்து விடுங்

கள்'' என உறுதி படக் கூறினாள்.

அதைக் கேட்ட நாரதர் ''அசுவபதி! உன் மகள் உறுதி படக் கூறுவதால் அவள் மனதை மாற்ற முடியாது. சத்தியவானைப் போல உலகில் யாரும் இல்லை. சாவித்திரியின் நற் செயல்களால் சத்தியவான் நீண்ட ஆயுளைப் பெறலாம். அதற்கு என் ஆசிகள்'' எனக்கூறி விட்டுச்சென்றார்.

நாரதர்கூறியபடியே அசுவபதி தன் மகளை சத்தியவானுக்கு மணம் செய்து வைக்கத் தீர்மானித்தான். அவன் உடனே சாவித்திரியை அழைத்துக் கொண்டும் தன் உறவினர்களையும் கூட்டிக் கொண்டும் துயுமத்சேனனின் ஆசிரமத்திற்குச் சென்றான். பார்வையை இழந்திருக்கும் துயுமத்சேனன் அங்கு ஒரு மரத்தின் கீழ் அமர்ந்திருந்தான். அசுவபதி அவனை அணுகி ''மன்னரே! நான் மத்திரதேச மன்னன். அசுவபதி. என் மகள் சாவித்திரியைத் தங்களது மைந்தனான சத்தியவானுக்கு மணம் செய்து வைக்க விரும்புகிறேன். தாங்கள் அவளைத்தங்களது மருமகனாக ஏற்க வேண்டும்'' என வேண்டினான்.

துயுமத்சேனனும் ''அரசே! நான் என் நாட்டை இழந்து காட்டில் இருப்பவன். உன் மகள் அழகானவள். அரண்மனையில் வளர்ந்தவள். இங்கு வந்து இருந்து எல்லாக் கஷ்டங்களையும் அனுபவிக்க முடியுமா?'' என்று கேட்டான். அசுவபதியும் ''சுகதுக்கங்கள் நாம் விரும்பினதும் கிடைப்பதல்ல. என் மகள் இதை நன்கு அறிவாள். அது பற்றி நன்கு யோசித்தே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். என் மகள் உங்கள் மகனை மணக்க எல்லா



விதத்திலும் தகுதி பெற்றவள். எனவே நாம் சம்மந்தம் செய்து கொள்வோம்'' என்றான்.

துயுமத்சேனனும் மகிழ்ந்து தன் ஆசிரமத்திலுள்ள முனிவர்களை எல்லாம் ஒன்று கூட்டி ஒரு நல்ல முகூர்த்தத்தைக் குறித்து சத்தியவானுக்கு சாவித்திரியை அக்கினி சாட்சியாக மணம் செய்து வைத்தான். அதன் பின் அசுவபதி தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான். தன் தந்தை அங்கிருந்து சென்றதும் சாவித்திரிதான் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி எடுத்து வைத்தாள். பட்டாடைகளுக்கு பதிலாக மரவுரியை அணிந்து தன் கணவனுக்கும் மாமனாருக்கும் மாமியாருக்கும் பணிவிடைகள் புரியலானாள்.

ஆனால் சாவித்திரி நாரதர் கூறியதை கவனத்தில் கொண்டிருந்தாள்.



நாட்களைக் கணக்கிட்டுக் கொண்டு வந்தாள். நாரதர் கூறிய கணக்கின்படி சத்தியவான் இறக்க இன்னும் நான்கு நாட்களே இருந்தன. சாவித்திரி அன்று முதல் திரிராத்திரி உபாசனை புரியலானாள். அவன் ஏற்றுள்ள கடும் விரதத்தைக் கண்டு துயுமத்சேனன் ''இந்தக் கடும் விரதத்தை ஏன் மேற்கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

சாவித்திரியும் ''விரதங்கள் இருப்பது எல்லோருடைய நன்மைக்குத் தானே. இதில் எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை'' என்றாள். அவள் எப்போது மூன்று நாட்கள் கழித்து நான்காவது நாள் வரப் போகிறது என்று காத்திருந்தாள். நான்காவது நாளும் வந்தது. அன்றுதான் நாரதர் கூறியபடி சத்தியவானின் உயிர் போகப் போகும் நாள்.

அன்று விடியற்காலையில் எழுந்து குளித்து சூரியோதயம் ஆனதும் அக்கினியை மூட்டி ஹோமம் செய்தாள். பிறகு அவள் தன் மாமனாரையும் மாமியாரையும் மற்ற பெரியோர்களையும் வணங்கி அவர்கள் எல்லோரிடமும் 'தீர்க்க சுமங்கலி பவ' என்ற ஆசிகளையும் பெற்றாள். தன் கணவனுக்கு அன்று நேரப் போவது பற்றி யோசித்துக் கொண்டிருக்கையில் அவளது மாமியாரும் மாமனாரும் ''சாவித்திரி! மூன்று நாள் விரதம் முடிந்ததற்கு பாரணை என்று எதுவும் செய்யவில்லையா?'' என்று கேட்டார்கள்.

சாவித்திரி ''இதற்குப் பாரணை என்பது இன்று சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகுதான்'' எனக் கூறினாள். அப்போது சத்தியவான் வழக்கம் போல சமித்துகளையும், மலர்களையும், காய், கனி, கிழங்குகளையும் காட்டிலிருந்து சேகரித்து வருவதற்காகக் கோடாலியைத் தோளின் மீது வைத்துக் கொண்டு கிளம்பத் தயாரானான். அப்போது சாவித்திரி அவனை அணுகி ''இன்று நானும் உங்களுடன் காட்டிற்கு வருகிறேன். ஏனோ இன்று என் மனம் இன்று என்னை உங்களோடு இருக்கச் சொல்கிறது'' என்றாள்.

சத்தியவானோ ''வேண்டாம். காடு பயங்கரமானது. அதில் நீ நடந்து செல்வது மிகவும் சிரமமாக இருக்கும். கல்லும் முள்ளும் நிறைந்திருக்கும். மேலும் நீ மூன்று நாட்கள் கடுமையாக விரதம் இருந்ததால் களைத்துப் போயிருப்பாய்'' என்றான். சாவித்திரியோ ''விரதம் இருந்ததால் நான் ஒன்றும் களைத்துப் போய் விடவில்லை.

ஏனோ இன்று உங்களுடன் சேர்ந்து காட்டைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்'' என்றாள்.

சத்தியவானும் ''சரி. உன்னிஷ்டம் என் தாய் தந்தையரிடம் சொல். அவர்கள் அனுமதி அளித்தால் என்னோடு நீ வரலாம்'' என்று கூறினான். சாவித்திரியும் தன் மாமனாரிடம் ''நான் இங்கு வந்து சுமார் ஒரு வருடம் ஆகிறது. இதுவரை நான் காட்டிற்குள் போய்ப் பார்த்தது இல்லை. இன்று என் கணவருடன் போக அனுமதி கொடுங்கள்'' என்று வேண்டினாள். என்றுமே எதுவுமே கேட்காத தன் மருமகள் அன்று அவ்வாறு வேண்டியதும் துயுமத்சேனனும் அவளை சத்தியவானுடன் காட்டிற்குப் போய் விட்டுவர அனுமதித்தான்.



அவன் தன் மாமனாரிடமும், மாமியாரிடமும் விடை பெற்றுக் கொண்டு தைரியத்துடன் சத்தியவானுடன் கிளம்பி விட்டாள். அவள் மனதில் மட்டும் என்ன நடக்குமோ என்ற பயம் ஒருபுறம் இருக்கத்தான் இருந்தது. சத்தியவான் அவளை அழைத்துக் கொண்டு வழியிலுள்ள அழகிய காட்சிகளை எல்லாம் வர்ணனை செய்து கொண்டே சென்றான்.

சத்தியவான் மலர்களையும் காய் கனி கிழங்குகளையும் சேகரித்து வைத்து விட்டு கோடாலி எடுத்து விறகு வெட்டலானான். சற்று நேரத்தில் அவன் களைத்துப் போகவே கோடாலியைக் கீழே போட்டு விட்டு சாவித்திரியருகே வந்து ''எனக்கு ஒரே தலைவலியாக இருக்கிறது. உடம்பெல்லாம் ஒரே வலி, சற்று நேரம் படுத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினான்.

சாவித்திரியும் அவன் தலையைத் தன் தொடை மீது வைத்துக் கொள்ளச் சொல்லி படுக்க வைத்தாள். சற்று நேரமானதும் சத்தியவானருகே ஒரு கரிய உருவம் நிற்பதை அவள் கண்டாள். அதன் கையில் பாசக் கயிறு இருப்பது கண்டு அவன் எமன் என அவள் ஊகித்து விட்டாள். அவள் சத்தியவானின் தலையைத் தன் தொடையிலிருந்து தரை மீது வைத்து விட்டு எழுந்து நின்று எமனை வணங்கி ''எமதர்மராஜாவே! உங்களை வணங்குகிறேன்'' என்றாள்.

எமன் திடுக்கிட்டாலும் சமாளித்தவாறே ''ஆம். நான் எமன்தான். நீ மகா பதிவிரதையானதால் என்னைக் காண முடிந்தது. சத்தியவானின் ஆயுள் இன்றோடு முடிகிறது. எனவே அவன்

உயிரைக் கவர்ந்து செல்ல நான் வந்திருக்கிறேன்'' என்றான். பிறகு அவன் பாசக் கயிறை வீசி சத்தியவானின் உயிரை எடுத்துக் கொண்டு செல்லலானான்.

சாவித்திரி தன் கணவனின் உடலை ஓரிடத்தில் பத்திரமாக வைத்து விட்டு எமனைப் பின்பற்றிச் சென்றாள். எமனோ அவளைத் திரும்பிப் போய்விடும்படிக் கூறினான். ஆனால் அவளோ தன் கணவன் இருக்கும் இடமே தனது இடம் எனக் கூறினாள். எமனும் மகிழ்ந்து ''சரி. நீ உன் கணவனின் உயிரைத் தவிர வேறு எதைக் கேட்டாலும் நான் கொடுக்கிறேன்'' என்றான்.

சாவித்திரியும் ''என் மாமனார் பார்வையற்றவர். உடல் வலிமையற்றவர். தம் நாட்டை இழந்தவர். இவை யாவும் அவருக்கு மீண்டும் கிடைக்க வேண்டும்'' எனவே எமனும் ''எல்லாமே அவருக்கு கிடைக்கும்'' எனக் கூறிவிட்டுச் செல்லலானான். அப்போதும் சாவித்திரி எமனைப் பின் தொடர்ந்தாள். எமனும் ''இன்னும் என்ன வேண்டும்?'' எனவே அவளும் ''என் தந்தைக்கு ஆண் குழந்தைகள் பிறக்க அருள வேண்டும்'' எனக் கேட்டாள்.

எமனும் ''உன் தந்தைக்கு நூறு புதல்வர்கள் பிறப்பார்கள்'' என்று வரம் கொடுத்து விட்டுச் செல்லலானான். அப்போதும் சாவித்திரி அவனைப் பின் தொடர்ந்தாள். எமன் அது கண்டு ''இன்னும் என்ன வேண்டும்? கேட்டு வாங்கிக் கொண்டு போய்விடு'' என்றான். சாவித்திரியும் ''எனக்கு புத்திரசந்தானம் கிடைக்க அருளுங்கள்'' எனக் கேட்கவே எமனும் சற்று யோசியாமல் ''உனக்கு நூறு புதல்வர்கள் பிறப்பார்கள்'' என்று வரமளித்தான். சாவித்திரி அப்போதும் எமன் பின் போக முயலவே எமனும் ''இன்னும் ஏன் வருகிறாய்? நீ கேட்ட



வரத்தைத் தான் கொடுத்து விட்டேனே'' எனவே சாவித்திரியும் ''பதிவிரதையான எனக்கு என் கணவர் இல்லாமல் எப்படி நீங்கள் வரமளித்தபடி குழந்தைப் பிறக்கும்?'' எனக் கேட்டாள்.

எமன் திடுக்கிட்டு விழித்தான். அவன் தான் கொடுத்த வரத்தைக்காக்க வேண்டி சத்தியவானின் உயிரைத் திருப்பி கொடுத்து விட்டான். சாவித்திரி தன் கணவனின் உடலை பத்திரப்படுத்தி வைத்த இடத்திற்கு வந்து சத்தியவானின் தலையைத் தன் தொடை மீது வைத்துக் கொண்டாள். சற்று நேரத்தில் கண் விழித்து சத்தியவான் ''நான் வெகு நேரம் தூங்கி விட்டேனா? ஒரு கரிய உருவம் வந்தது போலக் கனா கண்டேன்'' என்றான்.

சாவித்திரியும் ''அது பகல் கனவு தானே. நேரமாகிறது வீட்டிற்குப் போகலாம்'' எனக் கூறி சத்தியவானைக் கைலாகு கொடுத்து நிற்க வைத்தாள். அவனால் சரியாகக் கூட நிற்க முடியவில்லை. அதனால் அவனைத் தாங்கிக் கொண்டு மெதுவாக நடத்திக் கூட்டிக் கொண்டு ஆசிரமத்தை அடைந்தாள்.

திடீரெனத் தனக்குப் பார்வை கிடைத்தது கண்டு துயுமத்சேனன் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தான். இருட்டும் வேளை வந்ததும் சாவித்திரியும் சத்தியவானும் ஏன் இன்னும் வரவில்லை என எண்ணி அவன் தன் மனைவியோடு ஆசிரமத்தை விட்டு வெளியே வந்ததும் சாவித்திரியும் சத்தியவானும் வருவதைக் கண்டான். எல்லோரும் ஆசிரமத்திற்குள் சென்றார்கள்.

சாவித்திரி காட்டிற்குப் போனபின் நடந்ததையெல்லாம் அங்குள்ளவர்களிடம் கூறினாள். எமன் கொடுத்த வரங்கள் எல்லாம் பலித்தன. துயுமத்சேனனுக்கு அவனது நாடும் கிடைத்து விட்டது. அசுவபதிக்கும் குழந்தைகள் பிறந்தன. சாவித்திரியும் சத்தியவானும் சுகமாக வாழ்ந்து மக்கட் பேறும் பெற்றனர்.

மார்க்கண்டேய முனிவர் இக்கதையைக் கூறி ''சாவித்திரியின் கஷ்டங்கள் தீர்ந்தது போல துரௌபதியின் கஷ்டங்களும் போய் சுக வாழ்வு பெறுவாள்'' எனக்கூறிவிட்டு பாண்டவர்களையும் துரௌபதியையும் ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

## அலாதியான புத்தாண்டு!

உலகத்தை பிரம்மா சிருஷ்டித்தார் என்பது ஹிந்துக்களின் நம்பிக்கை. காலமும் கிருதயுகம் திரேதாயுகம், துவாரயுகம், கலியுகம் எனப் பிரிக்கப் பட்டது. அதன் படி தற்போது கலியுகத் தின் நான்காவது பாதத்தில் 5097 ஆண்டுகள் முடிந்துவிட்டன. கலியுகம் முடிய 4,32,000 ஆண்டுகள் உள்ளன. இந்த உலகம் தோன்றி 1,955,885,097 ஆண்டுகளாகிவிட்டன என்றும் நம்புகிறார்கள். தம் நாட்டில் பல இடங்களில் ஏப்ரல் 9ந் தேதி புத்தாண்டு ஆரம்ப நாளாகக் கொண்டாடப் பட்டது. ஏப்ரல் 14ல் வங்காளம், அஸ்ஸாம், தமிழ் நாடு, கேரளம்ஆகிய மாநிலங்கள் புத்தாண்டை ஆரம்பமாகக் கொண்டாடின.

## தனிமை தினம்

இந்தோனேஷியாவின் பாலித்தீவில் ஹிந்துக்களே அதிகம். அங்கு ஏப்ரல் 9ந் தேதியை தனிமை தினமாக அனுஷ்டிக்கிறார்கள். அன்று யாருமே தம் வீடுகளிலிருந்து வெளியே செல்வதில்லை. விளக்குகளை எரிப்பதில்லை. பயணங்களை மேற்கொள்வதில்லை. எந்தவிதமான விருந்துகளும், கேளிக்கைகளும் இராது. சிறப்பு அனுமதி பெற்ற' வண்டிகளைத் தவிர வேறு எவ்வித வண்டியும் சாலையில் செல்லாது சுற்றுலாப் பயணி களின் வருகையால் திமிலோகப்படும் அத்தீவு அன்று மட்டும் 20 மணிநேரங்களுக்கு அமைதியாக இருக்கும்.

## தங்கத் தபால் தலை!

இந்தோனேஷிய அதிபர் சுஹர்தோவின் மனைவி சீதி ஹர்தினா ஒரு வருடத்திற்கு முன் இறந்து போனார். ஏப்ரல் 28ந் தேதி அவரது பிறந்த நாளைக் கொண்டாடிய போது அவருக்கு மரியாதை செலுத்தும் வகையில் 30,000 சிறப்புத் தபால் தலைகள் வெளியிடப்பட்டன. இந்தத் தபால் தலை தங்கத்தால் தயாரிக்கப்பட்டது. இதன் மதிப்பு 112 டாலர்கள் (சுமார் 4000 ரூபாய்)முதல் நாள் உறை மீது அவரது கணவரான நாட்டின் அதிபர் சுஹர்தோவின் கையொப்பம் இருந்தது.

## ஆருயிர்த் தோழர்கள்!

அயோத்தியின் செட்டிலால் என்பவரும் பெய்ஜ்பாதின் மகம்மது மாத்தீனும் இணை பிரியா ஆருயிர் நண்பர்கள். ஐம்பது ஆண்டுகளாகச் சேர்ந்து இருந்தவர்கள். மகம்மது மாத்தீன் உடல்நலம் குன்றி இருப்பது அயோத்தியிலிருந்த செட்டிலாலுக்குத் தெரிந்தது. அவர் உடனே தம் நண்பரைக் காண பெய்ஜ்பாதிற்குச் சென்றார். அவர் தம் நண்பரின் வீட்டை அடையும் போது மகம்மது இறந்துவிட்டார். தம் நண்பரின் உயிரற்ற உடலைக் கண்டதும் செட்டிலால் அதே இடத்தில் விழுந்து இறந்து போனார். ஏப்ரல் 12ல் அவ்விருவருக்கும் ஒரே சமயத்தில் தனித்தனியாக ஈமச்சடங்குகள் நடை பெற்றன. இரு நகர மக்கள் அந்த இரு நண்பர்களின் நட்பை ஹிந்து முஸ்லிம் நல்லுறவின் எடுத்துக்காட்டாகக் கூறி வருகிறார்கள்.

அம்புலிமாமா
அனுபந்தம்
103



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# பூலோக சொர்க்கம் - நீலகிரி



தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலைகளின் ஒரு பகுதியே நீலகரி மலைகள். பச்சைப் பசேலென்றுள்ள இதன் பள்ளத் தாக்குகளில் முப்பது விதமான காட்டு மலர் கள் பூத்துக் குலுங்குகின்றன. நீலகிரி குறும் பாடுகள் எனப்படும் ஆடுகள் இங்கு அதிக மாக உள்ளன. இவற்றின் எண்ணிக்கை இப் போது ஆயிரம் என்றுள்ளது.

பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் குறிஞ்சி மலர்கள் இம்மலை சரிவுக் களை அழகு படுத்துகின்றன. சிறுத்தைப் புலி களும் கொடிய மிருகங்களும் கொண்ட காடுகள் பல இங்கு உள்ளன. இக்காடுகளில் பால்சம் வகை மரங்கள் உள்ளன. இம் மரங்களின் கிளைகளில் நார்கள் தென் படும். இங்கு பல வண்ணங்களில் மலர் களைக் காணலாம். நீலகிரி மலைகள் சுற்றுலாப் பயணிகளையும் அங்கு வருப வர்களையும் பெரிதும் கவர்கின்றன. யாவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தும் இந்த நீலகிரிப் பகுதியைப் பலரும் வியந்து பூலோக சொர்க்கம் என்று கூறு வது மிகவும் பொறுத்தமானதுதானே.



# சூரிய வம்சத்தை நிறுவிய இக்ஷ்வாகு

பாரதப் பண்பாட்டின் வளர்ச்சிக்கும் நாகரீகம் மேலோங்குவதற்கும் முக்கிய காரணமாக இருந்தவர்கள் ரிஷிகளும் மன்னர்களுமாவார்கள். வசிஷ்டரையும் விசுவாமித்திரரையும் ஸ்ரீராமரையும் ஜனகரையும் பற்றி ஒவ்வொரு இந்தியரும் நன்கு அறிந்தே இருக்கிறார்.

விசுவாமித்திரர் அரியாசனத்தைத் துறந்து முனிவராக ஆனவர். ஜனகர் மன்னராக இருந்த போதிலும் ரிஷி போல எளிய வாழ்க்கை வாழ்ந்தவர். நமது மன்னர்களில் பலர் துணிச்சல் மிக்க வீரர்கள். திறமையாக ஆட்சி புரிந்தவர்கள். சமூக முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவர்கள். ஆதர்ச மன்னராக விளங்கிய ஸ்ரீராமர் மனிதருள் மாணிக்கமாகத் திகழ்ந்து ஆட்சி புரிந்து ராம ராஜ்ஜியம் என்று இன்றும் புகழ ஆண்டு வந்தவர்.

ஸ்ரீராமர் இக்ஷ்வாகு குலத் திலகமாக விளங்கியவர். இவர் சூரிய வம்சத்தில் பிறந்தவர். சூரிய வம்சத்தை நிறுவியவர் இக்ஷ்வாகு. இக்ஷ்வாகுவின் தந்தை வைவஸ்வத மனு. தாயார் சிரத்தா தேவி. வைவஸவதர் என்றால் சூரிய பகவானின் புதல்வர் என்று பொருள்.

இக்ஷ்வாகுவைப் பற்றிய விவரங்கள் அதிகமாகத் தெரியாது போனாலும் அந்த வம்சத்தில் ஹரிச்சந்திரன், சகரன், பகீரதன் முதலிய புகழ்பெற்ற மன்னர்கள் தோன்றியதால் இக்ஷ்வாகுவின் பெயர் நிலைத்து நின்று விட்டது.



## உங்களுக்கு தெரியுமா?

### இன்காலர்கள்

பெரு நாட்டில் சிவப்பிந்தியர் சந்ததியைச் சேர்ந்த இன்காலர்கள் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் பெரும்பாலும் தலைநகர் லிமாவின் சுற்று வட்டாரங்களில் இருப்பவர்கள். இன்கா சமுதாயம் ஆட்சியாளர்களிலிருந்து அடிமைகள் வரை பல பிரிவினர்களாகப் பிரிந்துள்ளனர். இவர்கள் வழிபடும் தெய்வம் வீர்கோம்! இன்கா கைவினைக் கலைஞர்கள் பல வித அற்புதமான கலை அழகுப் பண்டங்களை உருவாக்குவதில் கைதேர்ந்தவர்கள். அவர்கள் உருவாக்கிய பொருள்களில் சில இன்றும் நிலைத்து உள்ளன. மக்காச் சோளம், உருளைக் கிழங்கு, மற்றும் சில காய்கறி வகைகளை இவர்கள் பயிர் செய்கிறார்கள். இவையே இவர்களின் முக்கிய உணவு. இல்மா என்னும் மிருகங்களை இவர்கள் வளர்க்கிறார்கள். இந்த மிருகம் இவர்களது அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாதது.



## வானவில்





### பனிமனிதன்

எஸ்கிமோ என்றால் பச்சை இறைச்சியை உண்பவன் என்று பொருள். இவர்கள் சீல் மாமிசத்தை உண்பவர்கள். சீலின் தோலை ஆடைகளையும் கூடாரங்கள் அமைக்கவும் இவர்கள் பயன்படுத்துகிறார்கள். 'கயாக்' எனப்படும் இவர்களது படகுகள் பெயர் பெற்றவை. கயாக்கில் அமரும் எஸ்கிமோ சீல் கோட்டை அணிந்திருப்பான். தரை மீது நாய்கள் இழுக்கும் 'ஸ்லெட்ஜ்' வண்டிகளில் இவர்கள் பயணம் செய்கிறார்கள். இவர்களது சிறிய வீடுகள் இக்லோ எனப்படுகின்றன. ஒவ்வொரு பிராணியிலும் இயற்கைப் பொருளிலும் ஆத்மா இருப்பதாக இவர்கள் நம்புகிறார்கள். பனிப் பகுதியில் வாழும் எஸ்கிமோக்களைக் காண்பதும் அவர்களோடு பழகுவதும் ஒரு விசித்திர அனுபவமே.



# எல்லாம் அவன் செயல்!

முன்காலத்தில் ஒரு மன்னன் இருந்தான். அவன் பரம நாத்திகன். அவன் தனது சக்தியைத் தவிர வேறு எந்த சக்தியையும் நம்பாதவன். அவனது நம்பிக்கை எதுவாக இருந்தாலும் ஆட்சி மிக நன்றாகவே இருந்தது. அதனால் மக்கள் சுக வாழ்வு வாழ்ந்தனர். மன்னனும் அவ்வப்போது மாறுவேடத்தில் நாட்டின் பல பாகங்களில் திரிந்து மக்களின் கருத்தை நேரில் அறிந்து வந்தான்.

ஒருமுறை வழக்கம் போல மாறுவேடத்தில் ஒரு வயலின் பக்கம் அந்த மன்னன் சென்றான். தாகம் எடுத்ததால் குதிரையிலிருந்து இறங்கி அங்கிருந்த கிணற்றிற்குப் போய் அவன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தான். அப்போது சற்று தூரத்தில் ஒரு மரத்தடியே ஒரு ஏழை மனிதன் கவலையுடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

மன்னன் அவனருகே போய் "என்னப்பா! ஏன் இப்படிக் கவலையுடன் இருக்கிறாய்" என்று கேட்டான். அவனும் "என்ன சொல்வேன்? நான் பிறந்தது முதல் கஷ்டங்களைத்தான் அனுபவித்து வருகிறேன். சுகம் என்பதே இல்லை" என்றான். மன்னனும் "ஏன்? எங்கும் வேலை கிடைக்கவில்லையா?" என்று கேட்க அவனும் "நான் ஏன் பிறரிடம் போய் வேலை கேட்க வேண்டும்? அதோ தெரிகிறதே மூன்று பனை மரங்கள்! அதுவரை பரந்து கிடக்கும் நிலம் என்னுடையது தான். ஆனால் அந்தக் கடவுள் கண் திறக்கவில்லை. அவ்வளவுதான்" என்று கூறினான்.

மன்னனுக்குச் சட்டென அவன் மீது கோபம் ஏற்பட்டது. ஆயினும் அவனை முட்டாளென எண்ணி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு அவன் "உழைத்து வேலை செய்தால் சுகமாக வாழ ஒரு சாண் நிலம் இருந்தாலே போதும். உனக்குத்தான் இவ்வளவு

—பாபா நாசம் சாமா—

பரந்த நிலம் இருக்கிறதே. நீ ஏன் அதில் விவசாயம் செய்யக் கூடாது?'' என்று கேட்டான். ஏழை மனிதனோ ''நான் இதுவரை சோம்பலுடன் ஒரு விநாடி கூட உட்கார்ந்ததில்லை. கடந்த மூன்று வருடங்களாக என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று தெரியுமா? முதல் வருடம் நல்ல விளைச்சல் கண்டதால் அறுவடை செய்து தானியத்தை மூட்டைகளில் கட்டி வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்தேன். வீடு என்றால் வைக்கோல் கூரையுள்ள வீடு அது. நல்ல விளைச்சலால் மகிழ்ந்த நான் என் மனைவியிடம் வடை, பாயசம் வைக்கச் சொல்லி விட்டு தானியம் வாங்கும் வியாபாரியைப் பார்க்கப் போனேன். நான் திரும்பி வந்த போது என் வீடு நெருப்புப் பற்றி எரிந்து கொண்டிருப்பதைக் கண்டேன். என் மனைவி அடுப்பில் வாணலியில் எண்ணெய் வைத்து விட்டு ஏதோ வேலையாக வெளியே போனாளாம். அப்போது சமையலறைக்குள் சென்ற என் மகன் ஒருவன் அடுப்பில் எரியும் விறகை எடுத்து என் இன்னொரு மகனிடம் ''உனக்கு சூடு போடப் போகிறேன்'' என்று மிரட்டவே அவன் ஓடலானான். அப்போது வீட்டிற்குள் வந்த மனைவி ''அவனை ஏனடா மிரட்டுகிறாய்?'' என்று கேட்க கொள்ளிக் கட்டையை வைத்திருந்த மகன் பயந்து அதை வீசி எறிந்தான். அது கூரையில் போய் விழவே வீடு பற்றி எரிந்தது. என் மனைவியும் புதல்வர்களும் கத்திக் கொண்டு வீட்டிலிருந்து வெளியே ஓடி வந்தார்கள். அவர்கள் போய் நெருப்பை அணைக்க சிலரை அழைத்து வருவதற்குள்



நெருப்பு பரவி வீட்டின் பெரும் பகுதியை அழித்து விட்டது. நான் அங்கு போனபோது ஐந்து மூட்டை தானியத்தைத்தான் எரிந்து போகாமல் அப்புறப்படுத்த முடிந்தது. என் வீடு என் தானியம் எல்லாம் அந்த வருடம் அழிந்து போயிற்று'' என்றான்.

அதைக்கேட்ட மன்னன் ''உன் மனைவியின் அஜாக்கிரதையால் தீ விபத்து ஏற்பட்டது. அறியாக் குழந்தைகளை தனியே விட்டுப் போயிருக்ககூடாது. சரி. இதற்குப் பின்என்ன நடந்தது?''என்று கேட்டான்.

அவனும் ''அடுத்த ஆண்டிலும் வயலில் விதை விதைத்துக் கடுமையாக உழைத்தோம். விளைச்சலும் நன்கு ஏற்பட்டது. சென்ற ஆண்டு போல நடந்து விடக் கூடாது என்று என் மனைவி எங்களூர் எல்லையம்



மனை வேண்டிக் கொண்டாள். இம் முறை தானிய மூட்டைகளை தானிய வியாபாரியின் கிடங்கிலேயே பத்திரப் படுத்தி வைக்க எண்ணி அவரது கிடங்கு ஒன்றையும் முன் கூட்டியே வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். அறுவடை முடிந்து போரடித்து தானியத்தைக் குவிக்கலானோம். அப்போது லேசாக மழைத் தூறல் விழவே தானியத்தை மூட்டைகளில் கட்டினோம். தானியம் அதிகமாக இருந்ததால் அதை மூட்டைகளில் கட்ட ஒரு நாள் பிடித்தது. முதலில் ஐந்து மூட்டைகளை எடுத்துப் போய் கிடங்கில் வைத்தோம். மற்ற மூட்டைகளை எடுப்பதற்குள் மழை பலமாகப் பிடித்து மூன்று நாட்களுக்கு விடாமல் பெய்து கொண்டே இருந்தது. எங்கும் தண்ணீர். நாங்கள் ஒரு வருடம் கஷ்டப்பட்டு பயிர் செய்ததெல்லாம் மழை அடித்துக் கொண்டு போய் விட்டது'' எனக் கூறி நிறுத்தினான்.

அப்போது மன்னன் ''முதலில் தீ. அடுத்தது நீர், இவை இரண்டு வருடங்களில் உனக்கு நஷ்டத்தை ஏற்படுத்தின. நீ சற்று முன்னெச்சரிக்கையாக இருந்திருந்தால் நஷ்டத்தைத் தவிர்த்திருக்கலாம். இரண்டாவது ஆண்டிலாவது அதிக ஆட்களை வேலைக்கு அமர்த்தி தானிய மூட்டைகளை கிடங்கிற்குக் கொண்டு போய்ச் சேர்த்திருக்கலாம்'' என்றான்.

அந்த ஏழை சட்டென மன்னனை வணங்கி ''அரசே! நீங்கள் இந்நாட்டு மன்னர். மாறு வேடத்தில் தானே வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அது கேட்டு மன்னன் ஆச்சரியப்பட்டு 'உனக்கு ஏன் திடீரென இப்படி ஒரு சந்தேகம் வந்தது?'' என்று கேட்டான். அவனும் ''என் அவல நிலையைக் கேட்டவர்களெல்லாம் அட பாவமே! கடவுள் உன்னை இப்படி எல்லாமா சோதிக்க வேண்டும்'' என்றே சொல்லி வருகிறார்கள். நீங்களோ இரண்டு முறைகளிலும் அவ்வாறு கூறாமல் தவறு என்னுடையதே என்று கூறினீர்கள். அதனால்தான் நீங்கள் இந்நாட்டு மன்னராகத்தான் இருக்க வேண்டும் என நினைத்தேன்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் ''பேஷ்! நீ நன்றாக ஆராய்ச்சி புரிகிறாயே. நான் யாராக இருந்தால் என்ன? மூன்றாவது ஆண்டில் என்ன நடந்தது என்று கூறு'' எனக் கேட்டான். ஏழையும் ''மூன்றாவது முறையும் எனக்கு துரதிர்ஷ்டம். முதலிரண்டு வருடங்களில் ஏற்பட்ட நஷ்டங்களால் பாதிக்கப்பட்ட என்

தானிய வியாபாரியிடம் கடன் வாங்கினேன். எரிந்து போன என் வீட்டைச் சரிப்படுத்தி நிலத்திலும் பயிரிட்டேன். விளைச்சலும் கணிசமாக இருந்தது. அறுவடை சமயத்தில் எனக்குக் கடன் கொடுத்த தானிய வியாபாரி இறந்து போனான். அவனது மகன் வந்து கடனை முழுவதுமாக வசூலிக்க என் தானியம் முழுவதையும் எடுத்துப் போகப் போவதாகப் பிடிவாதம் பிடித்தான். நான் என்ன வேண்டியும் கேளாமல் என் குடும்பத்திற்காகக் கொஞ்சம் தானியம் விட்டு விட்டு மீதமுள்ளதை எல்லாம் எடுத்துக் கொண்டு போய் விட்டான். அப்படியும் என் கடன் தீர்ந்த பாடில்லை. என் நிலத்தை அவன் பிடுங்கிக் கொண்டு என் குடும்பத்திற்கு வேண்டிய தானியத்தை மட்டும் பயிர் செய்து கொள்ளும்படி எனக்கு அனுமதி அளித்தான். இப்படி இந்த ஆண்டிலும் ஆண்டவன் என்ன சோதிக்கிறார். இந்தப் பயிரிட்டதிலும் அந்த வியாபாரியின் மகன் பெரும் பகுதியை எடுத்துக் கொண்டு போய் விடுவானோ என்று பயப்படுகிறேன். கிராம அதிகாரியிடம் இந்த அநியாயத்தைக் கூறினாலும் எதுவும் நடக்காது ஏனெனில் அந்த தானிய வியாபாரியின் மகன் கிராம அதிகாரியின் மாப்பிள்ளை. இனி நான் அந்த ஆண்டவனைத் தவிர வேற யாரிடம் போய் முறையிட முடியும்?'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு ''அநியாயம் நடக்கும் போது எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யாமல் இப்படி ஆண்டவன் பேரில் பாரத்தைப் போட்டு



விட்டு உட்கார்ந்திருக்கிறாயே. அவரா வந்து உதவப் போகிறார்? கிராம அதிகாரிக்கு மேலதிகாரியான வட்டார அதிகாரியிடம் முறை இடலாமே. அங்கும் நியாயம் கிடைக்கவில்லை என்றால் நேரே மன்னிடமே முறையிடலாமே. இப்படி ஏதாவது செய்தாலே நியாயம் கிட்டும். ஆண்டவன் வழி செய்வார் என்று புலம்பிக் கொண்டிருப்பதால் எவ்விதப் பலனும் ஏற்படாது'' என்றான்.

அதைக் கேட்ட ஏழை மீண்டும் மன்னனை வணங்கி ''ஐயா மகாராஜாவே! நீங்கள் எம்மன்னர் தாம் என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. சரி. என் விஷயம் என்ன என்று கேட்கிறீர்களா? அந்த ஆண்டவன் என் தலையில் துரதிர்ஷ்டம்தான் என்று எழுதி விட்டான். அதிர்ஷ்டம் இருப்பவனை



அழிக்கவும் முடியாது. துரதிர்ஷ்டம் பிடித்தவனைக் கை கொடுத்துத் தூக்கி உயர்த்தவும் முடியாது. இதை நான் முழுவதுமாக நம்புகிறேன். அதனால் தான் நான் அங்கும் இங்கும் அலையா மல் ஆண்டவனையே நம்பிக் கொண் டிருக்கிறேன்'' என்றான்.

தான் இந்நாட்டு மன்னன் என்பதை அறிந்தும் கூட அந்த ஏழை தன் போக் கிலேயே பேசுவதைக் கண்டு மன்ன னுக்கு கடும் கோபமே ஏற்பட்டது. அவன் கேலியாகச் சிரித்து ''அப்படி யானால் நீ வயலில் கஷ்டப்பட்டு ஏன் வேலை செய்ய வேண்டும்? நீ வீட்டி லேயே சாப்பிட்டு விட்டு வேலை செய்யாமல் படுத்துக் கிடந்தால் உனக்கு அந்த ஆண்டவன் எல்லா வற்றையும் கொடுக்காமலா இருப் பார்? உன் அதிர்ஷ்டம் உன்னை வானளவிற்கு உயர்த்தி விடாதா?'' எனக் கேட்டான்.

மன்னனுக்குக் கோபம் வந்து விட்டது எனத் தெரிந்தும் அந்த ஏழை சற்றும் பயப்படாமல் ''வேகமாகக் காற்று அடிக்கையில் விளக்கை ஏற்றி வைத்து விட்டு அது அணையாமல் ஆண்டவன் பார்த்துக் கொள்வார் என்று வறட்டு வேதாந்தம் பேசுப வனல்ல நான். அது அணையாம லிருக்க நம் கைகளால் மூடி அதைக் காக்க வேண்டும். அப்படிப் பாதுகாக் கும் போது அது அணைவதும் அணை யாது இருப்பதும் ஆண்டவன் செயல். இது போல எனக்கும் சரி, மன்னனான உங்களுக்கும் சரி, நடப்பதெல்லாம் அவரவர்களுக்கு ஆண்டவன் விதித் துள்ள அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது'' எனக் கூறினான்.

அப்போது மன்னன் மேலும் கோபம் கொண்டு ''இப்போதே நான் அந்த தானிய வியாபாரியின் மகனைப் பிடித்து தண்டித்து உன் நிலத்தை உனக்கு வாங்கிக் கொடுத்தால் அப் போதும் நீ அது ஆண்டவன் செயல் என்றுதான் கூறிக் கொண்டிருப் பாயா?'' என்று கேட்டான்.

ஏழையும் ''அப்போது உங்களை யும் அந்த ஆண்டவனையும் போற்று வேன். நல்லவர்கள் இவ்வுலகில் அந்த ஆண்டவனின் தூதர்களே. என் போன்ற ஏழைக்கு உதவும்படி உங்க ளைப் போன்ற நல்லவர்களை அந்த ஆண்டவன்தான் அனுப்புகிறார் என்று தான் நினைப்பேன். எனவே இருவருக்குமே நான் நன்றி செலுத்து வேன்'' என்றான்.

மன்னனுக்கு ஒரே எரிச்சலாக இருந்

தது. அந்த ஏழையைச் சவுக்கால் அடித்துத் தள்ள வேண்டும் என்றே அவன் நினைத்தான். மிகச் சிரமப்பட்டு அவன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு ''நீ சொல்வதுதான் என்ன? அதிர்ஷ்டமுள்ளவனை யாராலும் கெடுக்க முடியாதென்றும் அதிர்ஷ்டம் இல்லாதவனை உயர்த்தவும் முடியாது என்றும்தானே? எதையும் செய்வது அந்த ஆண்டவன் என்றுதானே?'' எனக் கேட்டான்.

ஏழையும் மிகவும் பணிவுடன் ''நான் நம்புவது அப்படித்தான் அரசே! ராட்சஸத் தீவில் என்னைக் கொண்டு போய் விட்டாலும் எனக்கு அதிர்ஷ்டம் ஏற்படலாம். என்னை உங்களோடு அழைத்துக் கொண்டு போய் அரண்மனையில் வைத்துக் கொண்டாலும் என் துரதிர்ஷ்டம் என்னை விட்டு விலகாமலும் இருக்கலாம். எல்லாம் அவன் செயல்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் ''அப்படியா? உன்னை ராட்சஸத் தீவிற்கு ஆறு மாதத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களுடன் அனுப்புகிறேன். அப்போது பார்க்கலாம் அந்த ஆண்டவன் உனக்குக் கொடுக்கும் அதிர்ஷ்டத்தை'' எனக் கூறி அவனைத் தன்னோடு கிளம்பி வரச் சொன்னான்.

ராட்சஸத் தீவு அழகானது. பச்சைப் பசேலென்று இருப்பது. அங்கு ஒரு ராட்சஸன் இருப்பதாயும் அவன் அங்கு வருபவர்களைப் பிடித்து விழுங்கி விடுவதாகவும் மக்கள் பேசிக் கொண்டார்கள். அதனால் அந்தத் தீவின் பக்கம் கூடப் போக எல்லோரும் பயப்பட்டார்கள். வியாபாரிகள் கூடத் தம் கப்பல்களை அத்தீவி



லிருந்து சற்று தூரம் தள்ளியே ஓட்டிச் சென்றார்கள். தப்பித் தவறி அத்தீவிற்குச் சென்றவர்கள் உயிருடன் திரும்பி வந்ததும் கிடையாது. அதனால்தான் யாருமே அங்கு போக பயப்பட்டார்கள்.

மன்னன் தன்னை ராட்சஸத் தீவிற்கு அனுப்பப் போகிறான் என்று கேட்டதும் அந்த ஏழை நடுங்கி ''அரசே! எனக்கு இவ்வளவு கடுமையான தண்டனையா? ஏதோ பேச்சு வாக்கில் சொன்னதைக் குற்றமாக எடுத்துக் கொண்டு சற்றும் இரக்கமில்லாமல் இப்படி தண்டிப்பது முறையா?'' என்று கேட்டான்.

ஏழை பயந்து நடுங்கியது மன்னனுக்குப் பெரும் மகிழ்ச்சியையே அளித்தது. அவன் சிரித்துக் கொண்டே ''நீ இந்த தண்டனையிலிருந்து தப்பு

வதும் உன் கையில்தான் இருக்கிறது. இதுவரை நீ சொன்னவை எல்லாம் பெரும்தவறு என்று ஒப்புக்கொண்டு விட்டால் உனக்கு இந்த தண்டனை இராது. உன் நிலபுலன்கள் உனக்குத் திரும்பக் கிடைக்கும். அது மட்டு மல்ல. நீ வசதியாக வாழப் பணமும் கொடுக்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட அந்த ஏழை சற்று யோசித்தான். அப்போதும் அவனுக் குத் தான் நம்பும் ஆண்டவனின் நினைவுதான் இருந்தது. பிறந்த நாளி லிருந்து அந்த நாள் வரை பெரியோர் கள் போதித்த நம்பிக்கைகளும் எண்ணங்களும் அவன் எண்ணத்தில் தோன்றின. அவற்றை எல்லாம் தூக்கி எறிந்து விட்டு மன்னன் கொடுக்கும் சுகவாழ்வைப் பெறுவதைப் போன்ற நீசத்தனமான செயல் வேறு எதுவும் இருக்க முடியாது என அவன் மனம் கூறியது.

அதனால் அவன் மன்னனிடம் உறுதியுடன் ''அரசே! என் அதிர்ஷ்டம் நான் ராட்சஸத் தீவில்தான் போய் இருக்க வேண்டும் என்று இருந்தால் அதிலிருந்து தப்ப முடியாது. எனவே உங்கள் விருப்பப்படியே என்னை அங்கே அனுப்புங்கள். அதற்குப் பிறகு அந்த ஆண்டவன் என்னைப் பார்த்துக் கொள்ள இருக்கவே இருக்கிறான். என் மனைவி மக்களின் கதி என்ன என்று கேட்கிறீர்களா? அதுவும் அவர் களது அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது'' என்றான்.

அதைக் கேட்ட மன்னனுக்கு அது வரை அந்த ஏழை மீது இருந்த கொஞ்ச நஞ்ச இரக்கமும் போய் விட்டது. அவன் உடனேயே அந்த கிராம அதி காரியை அழைத்து ''இவனையும் இவனது குடும்பத்தினரையும் இப் போதே என்னுடன் அனுப்புவதற் கான ஏற்பாடுகளைச் செய்'' என்று கட்டளை இட்டான். என்ன நடந்தது என்பதை அறியாமல் ஊரார் அந்த ஏழைக்கு திடீரென அதிர்ஷ்டம் அடித்து விட்டதாக எண்ணிக் கொண் டார்கள்.

தலைநகரை அடைந்ததும் மன்னன் அந்த ஏழைக்கும் அவனது குடும்பத்த வருக்கும் இருக்க இடவசதி செய்து கொடுத்தான். ஆனால் ஏழையை ராட் சஸத் தீவிற்கு அனுப்ப ரகசியமாக ஏற்பாடுகளைச் செய்யலானான்.

**(தொடரும்)**





# தீரசிம்மனின் கதை

வீரபுர மன்னன் வீரசேனன் இறந்த பின் அவனது தம்பி சூரசேனன் நாட்டின் ஆட்சியை நடத்தி வந்தான். வீரசேனனுக்கு தீரசேனன் என்ற மகன் இருந்தான். அவன் ஐந்து வயதுச் சிறுவன். பெரியவனானதும் அவன் நாட்டின் மன்னனாகி விடுவான். அதுவரைதான் சூரசேனன் ஆட்சி புரிய முடியும்.

சூரசேனன் தானே நிரந்தரமாக மன்னனாக எப்படி இருப்பது என்று யோசிக்கலானான். இதற்குத் தடையாக இருப்பவன் தன்அண்ணன் வீரசேனனின் மகன் தீரசேனன். அவனைக்கொன்று விட்டால் தானே என்றென்றும் அரசனாக இருந்து விடலாமென அவன் எண்ணினான். இதை ஊகித்து விட்ட அமைச்சர் அமரநாதர் அரசகுமாரனை யாருக்கும் தெரியாமல் தன்னோடு அழைத்துக் கொண்டு நாட்டின் எல்லையை அடுத்துள்ள சிம்மக் கோட்டைக்குச் சென்றார். அதை அவரது சிற்றன்னை ஆண்டு வந்தாள்.

சிம்மக் கோட்டைக்குப் போகும் வழியில் அமரநாதர் தேவபுரம் என்ற ஊரில் ஒரு பணக்கார விவசாயியின் வீட்டில் அரசகுமாரனுடன் தங்கினார். அரசகுமாரனை அவ்வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் உற்று உற்றுப் பார்த்தார்கள். அதற்குக் காரணம் அந்த விவசாயியின் மகனும் அரசகுமாரனும் ஒரே அச்சில் வார்த்தது போல இருந்ததுதான். அவன் பெயர் பலவீரன்.

பலவீரனைத் தன்னோடு வைத்துக் கொண்டால் உபயோகமாக இருக்குமென அமரநாதர் எண்ணினார். அதனால் அவர் அந்த விவசாயியிடம் ''உன் மகனை என்னோடு அனுப்பு. இந்த அரச குமாரனோடு இவனுக்கும் கல்வி அளித்து முன்னுக்குக் கொண்டு வருகிறேன்'' என்றார். விவசாயியும் அதற்கு ஒப்புக் கொண்டான். அமைச்சர் தீரசேனனையும் பலவீரனையும்

—அருணா குமார்—

பிச் சென்றார். சூரசேனன் தன் படைகளுடன் சிம்மக் கோட்டையை முற்றுகை இட்டிருந்தான்.

தீரசேனனைத் தன்னிடம் ஒப்படைத்து விட்டால் தான் படைகளுடன் திரும்பி போய் விடுவதாக சூரசேனன் அமரநாதரிடம் தெரிவித்தான். அமரநாதர் இச் சமயத்தில் பலவீரனைப் பயன்படுத்த எண்ணினார். அதனால் அவர் பலவீரனைத் தனியாக அழைத்துப்போய் ''அரசகுமாரனை ஒப்படைக்கும்படி அவனது எதிரி மிரட்டுகிறான். தீரசேனனை ஒப்படைத்தால் அவனை அந்த எதிரி கொன்று விடுவான். நீதான் அரசகுமாரன் என்று கூறி உன்னை நான் அந்த எதிரியிடம் அனுப்பினால் அவன் உன்னை அரசகுமாரன் என்றே நினைத்து விடுவான். அதனால் ஒரு வேளை உன் உயிருக்குக் கூட ஆபத்து வரலாம். ஆனால் நீ உன் ஆருயிர் நண்பனின் உயிரைக் காப்பாற்றி விடுவாய்'' என்றான்.

அதைக் கேட்ட பலவீரன் ''ஐயா! நான் இறப்பதால் பெரிய நஷ்டம் எதுவும் இல்லை. ஆனால் தீரசேனன் இறந்தால் நாட்டின் வருங்கால மன்னன் இல்லாது போய் விடுவான். அரசவம்சம் தழைத்திருக்க நான் அந்த எதிரியிடம் போகிறேன். ஆனால் இது தீரசேனனுக்குத் தெரியக் கூடாது'' என்றான்.

அமரநாதர் அது கேட்டு மகிழ்ந்து பலவீரனுக்கு அரசகுமாரனின் ஆடைகளை அணிவித்து சில வீரர்களுடன் கோட்டைக்கு வெளியே முகாமிட்டிருக்கும் சூரசேனனின் கூடாரத்திற்கு அனுப்பி வைத்தார். பலவீரன் சென்ற



அழைத்துக் கொண்டு நான்கு நாட்கள் பயணம் செய்து சிம்மக் கோட்டையை அடைந்தார்.

தீரசேனனும் பலவீரனும் ஆருயிர் தோழர்களாகி விட்டார்கள். சிம்மக் கோட்டையின் ராணி அவர்களை வரவேற்று அவர்கள் இருக்க எல்லா வசதிகளும் செய்து கொடுத்தாள். இப்படியாக சில நாட்கள் கழிந்தன. இதற்குள் சூரசேனனுக்கு அரசகுமாரன் சிம்மக் கோட்டையில் இருப்பது தெரிந்து விட்டது. இதை அறிந்த அமரநாதர் ''இனி சூரசேனன் சும்மா இருக்க மாட்டான். தன் படைகளோடு வந்து சிம்மக் கோட்டையைத் தாக்குவான்'' என எண்ணினார். தன்னால் சிம்மக் கோட்டைக்கு ஆபத்து வந்துவிடக் கூடாதே என எண்ணி சூரசேனனுடன் சமாதான வார்த்தைகள் பேச அமரநாதர் கிளம்

சற்று நேரத்திற்கெல்லாம் தீரசேனன் அவனைத் தேடிக் கொண்டு வந்தான். அவனை சில வீரர்கள் கோட்டைக்கு வெளியே அழைத்துச் சென்றார்கள் என்பது அவனுக்குத் தெரிய வந்தது.

கோட்டைக்கு வெளியே தன் சிற்றப்பன் படைகளோடு வந்திருப்பதை அவன் அறிவானாதலால் பல வீரனைத் தவறுதலாக அரசகுமாரன் என எண்ணி சூரசேனனின் வீரர்கள் கொன்றுவிடப் போகிறார்களே என நினைத்து ஒரு வீரனின் வாளை எடுத்துக்கொண்டு கோட்டைக்கு வெளியே ஓடினான்.

பலவீரன் சூரசேனனின் கூடாரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டான். அப்போது எல்லா வீரர்களும் அவனைப் பார்த்து ''ஓ! அரசகுமாரன்'' என்று கூவினார்கள். சூரசேனனும் எல்லோரையும் தன் கூடாரத்தை விட்டுப் போய்விடும்படிக் கட்டளை இட்டான். எல்லோரும் சென்ற பின் அவன் ''என்னிடமிருந்தா தப்ப முயன்றாய்? உன்னை இப்போதே கொல்கிறேன் பார்'' என உறுமியவாறே அவனைப் பிடிக்க முயன்றான். பல வீரனோ அவனது கைக்கு அகப்படாமல் அங்கும் இங்கும் ஓடினான்.

இதே சமயம் 'நில்' என்று கூடார வாசலிலிருந்து ஒரு குரல் கேட்கவே சூரசேனன் திரும்பிப் பார்த்தான். அங்கு தீரசேனன் வாளுடன் நிற்பது கண்டு இரண்டு தீரசேனர்களா என்று சூரசேனன் மலைத்து நின்றான். அப்போது தீரசேனன் சற்றும் தாமதியாமல் சூரசேனன் மீது பாய்ந்து அவன் தலையை வெட்டினான்.

சூரசேனன் இறந்ததும் அவனது படை வீரர்கள் பயந்து ஓடி விட்டார்கள். அரசகுமாரன் தீரசேனனே தன் சிற்றப்பனைக் கொன்றவன் என்றும் சூரசேனன் அரசகுமாரனைக் கொல்ல முயன்றான் என்றும் எல்லோருக்கும் தெரிந்துவிட்டது.

இதற்குப் பின் அமரநாதர் தீரசேனனுடனும் பலவீரனுடனும் வீரபுரத்தை அடைந்தார். தீரசேனன் வீரபுர மன்னனானான். அமரநாதர் ஆலோசனைகளின் படி அவன் நன்கு ஆட்சி புரிந்தான். பலவீரன் அவனது மெய்க் காவலர் படையின் தலைவனாகி தீரசேனனுக்கு உற்ற துணையாக இருந் தான்.



## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 ஆகஸ்ட் மாத இதழில் வெளியிடப்படும்.



K. SUBRAHMANYAM



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூன் 30–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

### ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **மண்வளம் குறைந்தாலும் மனம் தளரவில்லை**

இரண்டாவது போட்டோ : **நீர்வளம் குறைந்தாலும் மனம் தளரவில்லை**

பரிசு பெற்றவர் : **திரு. கே. ஜகன்நாதன், சேலம் - 15.**




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# Eggcetera
Brain Scramblers for Kids

There are seven differences between the two pictures.
See if you can find them all.





An egg is packed with protein, vitamins and 11 minerals essential for your body.

# மகத்தான இலவச சலுகை

20 நட்ராஜ் ப்ளாஸ்டோ எரேஸர் கொண்ட ஒவ்வொரு பேக்குடன்



இலவசம்
1 நட்ராஜ்
ப்ரெஸ்-ஃபிட்
ஷார்ப்னர் மற்றும்
2 அப்ஸரா
நான்-டஸ்ட் எரேஸர்கள்
(ரூ 12/-
பெறுமானமுள்ள)




**NATARAJ®**
PLASTO ERASERS

ஹிந்துஸ்தான் பென்சில்ஸ் லிமிடெட் வழங்கும் தரமான தயாரிப்புகள்.

இச்சலுகை ஸ்டாக் உள்ள வரையே. இலவச சலுகை குறிப்பிடப்பட்ட பேக்குகளின் மேல் மட்டுமே சலுகை வழங்கப்படும்.

everest/97/HPL/20tm